---

அகத்தாரேவாழ்வாரென்றண்ணாந்துநோக்கிப்
புகத்தாம்பெறாஅர்புறங்கடைபற்றி
மிகத்தாம்வருந்தியிருப்பரேமேலைத்
தவத்தாற்றவஞ்செய்யாதார். * க *

ஆவாநாமாக்கநசைஇயறமறந்து
போவாநாமென்னாப்புலைநெஞ்சேயோவாது
நின்றுஞற்றிவாழ்தியெனினுநின்வாழ்நாள்கள்
சென்றனசெய்வதுரை. * உ *

வினைப்பயன்வந்தக்கால்வெய்யவுயிரா
மனத்தினழியுமாம்பேதைநினைத்ததனைத்
தொல்லையதென்றுணர்வாரோதடுமாற்றத்
தெல்லையிகந்தொருவுவார். * ௩ *

அரும்பெறல்யாக்கையைப்பெற்றபயத்தாற்
பெரும்பயனுமாற்றவேகொள்ககரும்பூர்ந்த
சாறுபோற்சாலவும்பின்னுதவிமற்றதன்
கோதுபோற்போகுமுடம்பு. * ச *

கரும்பாட்டிக்கட்டிசிறுகாலைக்கொண்டார்
துரும்பெழுந்துவேங்காற்றுயராண்டுழவார்
வருந்தியுடம்பின்பயன்கொண்டார்கூற்றம்
வருங்காற்பரிவதிலர். * ரு *

இன்றுகொலன்றுகொலென்றுகொலென்னாது
பின்றையேநின்றதுகூற்றமென்றெண்ணி
யொருவுமின்றீயவையொல்லும்வகையான்
மருவுமின்மாண்டாரறம். * ௬ *

மக்களாலாயபெரும்பயனுமாயுங்கா
லெத்துணையுமாற்றப்பலவானாற்றொக்க
வுடம்பிற்கேயொப்புரவுசெய்தொழுகாதும்பர்க்
கிடந்துண்ணப்பண்ணப்படும். * ௭ *

உறக்குந்துணையதோராலம்வித்தீண்டி
யிறப்பநிழற்பயந்தாஅங்கறப்பயனுந்
தான்சிறிதாயினுந்தக்கார்கைப்பட்டக்கால்
வான்சிறிதாப்போர்த்துவிடும். * ௮ *

வைகலும்வைகல்வரக்கண்டுமஃதுணரார்
வைகலும்வைகலைவைகுமென்றின்புறுவர்
வைகலும்வைகற்றம்வாழ்நாண்மேல்வைகுதல்
வைகலைவைத்துணராதார். * ௯ *

மானவருங்கலநீக்கியிரவென்னு
மீனவிளிவினால்வாழ்வேன்மன்னீனத்தா
லூட்டியக்கண்ணுமுறுதிசேர்ந்திவ்வுடம்பு
நீட்டித்துநிற்குமெனின், * ௰ * அ ௨௰.

---

மாக்கேழ்மடநல்லாயென்றாற்றுஞ்சான்றவர்
நோக்கார்கொனொய்யதோர்புக்கிலையாக்கைக்கோ
ரீச்சிறகன்னதோர்தோலறினும்வேண்டுமே
காக்கைகடிவதோர்கோல். * ௧ *

தோற்போர்வைமேலுந்துளைபலவாய்ப்பொய்ம்மறைக்கு
மீப்போர்வைமாட்சித்துடம்பானான்மீப்போர்வை
பொய்ம்மறையாக்காமம்புகலாதுமற்றதனைப்
பைம்மறியாப்பார்க்கப்படும். * ௨ *

தக்கோலந்தின்றுதலைநிறையப்பூச்சூடிப்
பொய்க்கோலஞ்செய்யவொழியுமேயெக்காலு
முண்டிவினையுளுறைக்குமெனப்பெரியோர்
கண்டுகைவிட்டமயல். * ௩ *

தெண்ணீர்க்குவளைபொருகயல்வேலென்று
கண்ணில்புன்மாக்கள்கவற்றவிடுவேனை
யுண்ணீர்களைந்தக்கானுங்குசூன்றிட்டன்ன
கண்ணீர்மைகண்டொழுகுவேன். * ௪ *

முல்லைமுகைமுறுவன்முத்தென்றிவைபிதற்றுங்
கல்லாப்புன்மாக்கள்கவற்றவிடுவேனை
வெல்லாருங்காணப்புறங்காட்டுதிர்ந்துக்க
பல்லென்புகண்டொழுகுவேன். * ௫ *

குடருங்கொழுவுங்குருதியுமென்புந்
தொடருநரம்பொடுதோலுமிடையிடையே
வைத்ததடியும்வழும்புமாமற்றிவற்று
ளெத்திறத்தாளீர்ங்கோதையாள். * சு *

ஊறியுவர்த்தக்கவொன்பதுவாய்ப்புலனுங்
கோதிக்குழம்பலிக்குங்கும்பத்தைப்பேதை
பெருந்தோளிபெய்வளாவென்னுமீப்போர்த்த
கருந்தோலாற்கண்விளக்கப்பட்டு. * எ *

பண்டமறியார்படுசாந்துங்கோதையுங்
கொண்டுபாராட்டுவார்கண்டிலர்கொன்மண்டிப்
பெடைச்சேவல்வன்கழுகுபேர்த்திட்டுக்குத்து
முடைச்சாகாடச்சிற்றுழி. * அ *

கழிந்தாரிடுதலைகண்டார்நெஞ்சுட்கக்
குழிந்தாழ்ந்தகண்ணவாய்த்தோன்றியொழிந்தாரைப்
போற்றிநெறிநின்மினிற்றிதன்பண்பென்று
சாற்றுங்கொல்சாலச்சிரித்து. * கூ *

உயிர்போயார்வெண்டலையுட்கச்சிரித்துச்
செயிர்தீர்க்குஞ்செம்மாப்பவரைச்செயிர்தீர்ந்தார்
கண்டிற்றிதன்வண்ணமென்பதனாற்றம்மையோர்
பண்டத்துள்வைப்பதிலர். * ௰ * ஆக ௫௰

விளக்குப்புகவிருண்மாய்ந்தாங்கொருவன்
றவத்தின்முன்னில்லாதாம்பாவம் விளக்குநெய்
தேய்விடத்துச்சென்றிருள்பாய்ந்தாங்குநல்வினை
தீர்விடத்துநிற்குமாந்தீது. * ௧ *

நிலையாமைநோய்மூப்புச்சாக்காடென்றெண்ணித்
தலையாயார்தங்கருமஞ்செய்வார்தொலைவில்லாச்
சத்தமுஞ்சோதிடமுமென்றாங்கிவைபிதற்றும்
பித்தரிற்பேதையாரில். * ௨ *

இல்லமிளமையெழில்வனப்புமீக்கூற்றஞ்
செல்வம்வலியென்றிவையெல்லாமெல்ல
நிலையாமைகண்டுநெடியார்துறப்பர்
தலையாயார்தாமுய்யக்கொண்டு. * ௩ *

துன்பம்பலநாளுழந்துமொருநாளை
யின்பமேகாமுறுவரேழையாரின்ப
மிடைதெரிந்தின்னாமைநோக்கிமனையா
றடைவொழிந்தாரான்றமைந்தார். * ௪ *

கொன்னேகழிந்தன்றிளமையுமின்னே
பிணியொடுமூப்பும்வருமாற்றுணிவொன்றி
யென்னொடுசூழாதெழுநெஞ்சேபோதியோ
நன்னெறிசேரநமக்கு * ௫ *

மாண்டகுணத்தொடுமக்கட்பேறில்லெனினும்
பூண்டான்கழித்தற்கருமையார்பூண்ட
மிடியென்னுங்காரணத்தின்மேன்முறைக்கண்ணே
கடியென்றார்கற்றறிந்தார் * ௬ *

ஊக்கித்தாங்கொண்டவிரதங்களுள்ளுடையத்
தாக்கருந்துன்பங்கடாந்தலைவர்தக்கா
னீக்கிநிறூஉமுரவோரேநல்லொழுக்கங்
காக்குந்திருவத்தவர் * ௭ *

தம்மையிகழ்ந்தமைதாம்பொறுப்பதன்றிமற்
றெம்மையிகழ்ந்தவினைப்பயத்தாலும்மை
யெரிவாய்நிரயத்துவீழ்வர்கொலென்று
பரிவதூஉஞ்சான்றோர்கடன். * ௮ *

மெய்வாய்கண்மூக்குச்செவியெனப்பேர்பெற்ற
வைவாயவேட்கையவாவினைக்கைவாய்
கலங்காமற்காத்துய்க்குமாற்றலுடையான்
விலங்காதுவீடுபெறும். * ௯ *

துன்பமேமீதூரக்கண்டுந்துறவுள்ளா
ரின்பமேகாமுறுவரேழையாரின்ப
மிசைதோறுமற்றதனின்னும்மைநோகிப்
பசைதல்பரியாதாமேல். * ௰ * ஆ௨ சு௰.

மதித்திறப்பாருமிறக்கமதியா
மிதித்திறப்பாருமிறக்கமிதித்தேறி
யீயுந்தலைமேலிருத்தலாலஃதறிவார்
காயுங்கதமின்மைநன்று. * ௧ *

தண்டாச்சிறப்பிற்றம்மின்னுயிரைத்தாங்காது
கண்டுழியெல்லாந்துறப்பவோமண்டி
யடிபெயராதாற்றவிளிவந்தபோழ்தின்
முடிகிற்குமுள்ளத்தவர். * ௨ *

காவாதொருவன்றன்வாய்திறந்துசொல்லுஞ்சொ
லோவாதேதன்னைச்சுடுதலாலோவாதே
யாய்ந்தமைந்தகேள்வியறிவுடையாரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்தசொல்லார்கறுத்து. * ௩ *

நேர்த்துநிகரல்லார்நீரல்லசொல்லியக்கால்
வேர்த்துவெகுளார்விழுமியோரோர்த்ததனை
யுள்ளத்தானுள்ளியுரைத்துராயூர்கேட்பத்
துள்ளித்தூண்முட்டுமாங்கீழ். * ௪ *

இளையானடக்கமடக்கங்கிளைபொரு
ளில்லான்கொடையேகொடைப்பயனெல்லா
மொறுக்குமதுகையுரனுடையாளன்
பொறுக்கும்பொறையேபொறை, * ௫ *

கல்லெறிந்தன்னகயவர்வாயின்னாச்சொ
லெல்லாருங்காணப்பொறுத்துய்ப்பரொல்லை
யிடுநீற்றாற்பையவிந்தநாகம்போற்றத்தங்
குடிமையான்வாதிக்கப்பட்டு. * ௬ *

மாற்றாராய்நின்றுதம்மாறேற்பார்க்கேலாமை
யாற்றாமையென்னாரறிவுடையாராற்றாமை
நேர்த்தின்னாமற்றவர்செய்தக்காற்றாமவரைப்
பேர்த்தின்னாசெய்யாமைநன்று. * ௭ *

நெடுங்காலமோடினுநீசர்வெகுளி
கெடுங்காலமின்றிப்பரக்குமடுங்காலை
நீர்கொண்டவெப்பம்போற்றானேதணியுமே
சீர்கொண்டசான்றோர்சினம். * ௮ *

உபகாரஞ்செய்ததனையோராதேதங்க
ணபகாரமாற்றச்செயினுமுபகாரந்
தாஞ்செய்வதல்லாற்றவற்றினாற்றீங்கூக்கல்
வான்றோய்குடிப்பிறந்தார்க்கில். * ௯ *

கூர்த்துநாய்கௌவிக்கொளக்கண்டுந்தம்வாயாற்
பேர்த்துநாய்கௌவினாரீங்கில்லைநீர்த்தன்றிக்
கீழ்மக்கள்கீழாயசொல்லியக்காற்சொல்பவோ
மேன்மக்கடம்வாயான்மீட்டு. * ௰ * அதி ௭௰

கோதையருவிக்குளிர்வரைநன்னாட
பேதையோடியாதுமுரையற்கபேதை
யுரைப்பிற்சிதைந் துரைக்குமொல்லும்வகையான்
வழுக்கிக்கழிதலேநன்று. * ௧ *

நேரல்லார்நீரல்லசொல்லியக்கான்மற்றது
தாரித்திருத்தறகுதிமற்றோரும்
புகழ்மையாக்கொள்ளாதுபொங்குநீர்ஞாலஞ்
சமழ்மையாக்கொண்டுவிடும். * ௨ *

காதலார்சொல்லுங்கடுஞ்சொல்லுவந்துரைக்கு
மேதிலாரின்சொலிற்றீதாமோபோதெலா
மாதர்வண்டார்க்குமலிகடற்றண்சேர்ப்ப
வாவதறிவார்ப்பெறின். * ௩ *

அறிவதறிந்தடங்கியஞ்சுவதஞ்சி
யுறுவதுலகுவப்பச்செய்துபெறுவதனா
லின்புற்றுவாழுமியல்புடையாரெஞ்ஞான்றுந்
துன்புற்றுவாழ்தலரிது. * ௪ *

வேற்றுமையின்றிக்கலந்திருவர்நட்டக்காற்
றேற்றாவொழுக்கமொருவன்கணுண்டாயி
னாற்றுந்துணையும்பொறுக்கபொறானாயிற்
றூற்றாதேதூரவிடல் * ௫ *

இன்னாசெயினுமினியவொழிகென்று
தன்னையேதானோவினல்லது துன்னிக்
கலந்தாரைக்கைவிடுதல்கானகநாட
விலங்கிற்கும்விள்ளலரிது.                * ௬ *

பெரியார்பெருநட்புக்கோடறாஞ்செய்த
வரியபொறுப்பவென்றன்றோவரியரோ
வொல்லெனருவியுயர்வரைநன்னாட
நல்லசெய்வார்க்குத்தமர்                * ௭ *

வற்றிமற்றாற்றப்பசிப்பினும்பண்பிலார்க்
கற்றமறியவுரையற்கவற்ற
மறைக்குந்துணையார்க்குரைப்பவேதம்மைத்
துறக்குந்துணிவிலாதார்.                * ௮ *

இன்பம்பயந்தாங்கிழிவுதலைவரினு
மின்பத்தின்பக்கமிருந்தைக்கவின்ப
மொழியாமைகண்டாலுமோங்கருவிநாட
பழியாகாவாறேதலை.                * ௯ *

தான்கெடினுந்தக்கார்கேடெண்ணற்கதன்னுடம்பி
னூன்கெடினுமுண்ணார்கைத்துண்ணற்கவான்கவிந்த
வையகமெல்லாம்பெறினுமுரையற்க
பொய்யோடிடைமிடைந்தசொல்.    * ௰ *        ௮௰

---

அச்சம்பெரிதாலதற்கின்பஞ்சிற்றளவா
னிச்சநினையுங்காற்கோக்கொலையா னிச்சலுங்
கும்பிக்கேகூர்த்தவினையாற்பிறன்றார
நம்பற்கநாணுடையார். * ௧ *

அறம்புகழ்கேண்மைபெருமையிந்நான்கும்
பிறன்றாரநச்சுவார்ச்சேராபிறன்றார
நச்சுவார்ச்சேரும்பகைபழிபாவமென்
றச்சத்தொடிந்நாற்பொருள். * ௨ *

புக்கவிடத்தச்சம்போதரும்போதச்சந்
துய்க்குமிடத்தச்சந்தோன்றாமற் காப்பச்ச
மெக்காலுமச்சந்தருமாலெவன்கொலோ
வுட்கான்பிறனில்புகல். * ௩ *

காணிற்குடிப்பழியாங்கையுறிற்கால்குறையு
மாணின்மைசெய்யுங்காலச்சமாநீணிரயத்
துன்பம்பயக்குமாற் றுச்சாரிநீகண்ட
வின்பமெனக்கெனைத்தாற்கூறு. * ௪ *

செம்மையொன்றின்றிச்சிறியாரினத்தராய்க்
கொம்மைவரிமுலையாடோண்மரீஇ யும்மை
வலியாற்பிறர்மனைமேற்சென்றாரேயிம்மை
யலியாகியாடியுண்பார். * ௫ *

பல்லாரறியப்பறையறைந் தநாட்கேட்டுக்
கல்யாணஞ்செய் துகடிப்புக்க மெல்லியற்
காதன் மனையாளு மில்லாளா வென்னொருவ
னேதின்மனையாளைநோக்கு. * ௬ *

அம்பலயலெடுப்பவஞ்சித்தமர்பரீஇ
வம்பலன்பெண்மரீஇமைந்துற்றநம்பு
நிலைமையினெஞ்சத்தான் றுப்புரவுபாம்பின்
றலைநக்கியன்னதுடைத்து. * ௭ *

பாவாவெளிப்படாபல்லோர்கட்டங்கா
வுரவோர்கட்காமநோயோஒகொடிதே
விரவாருணாணுப்படலஞ்சியாது
முரையாதுள்ளாறிவிடும். * ௮ *

அம்புமழலுமவிர்கதிர்ஞாயிறும்
வெம்பிச்சுடினும்புறஞ்சுடும் வெம்பிக்
கவற்றிமனத்தைச்சுடுதலாற்காம
மவற்றினுமஞ்சப்படும். * ௯ *

ஊருளெழுந்தவுருகெழுசெந்தீக்கு
நீருட்குளித்துமுயலாகுநீருட்
குளிப்பினுங்காமஞ்சுடுமேகுன்றேறி
யொளிப்பினுங்காமஞ்சுடும். * ௰ *

இல்லாவிடத்துமியைந்தவளவினா
லுள்ளவிடம்போற்பெரிதுவந்துமெல்லக்
கொடையொடுபட்டகுணனுடைமாந்தர்க்
கடையாவாமாண்டைக்கதவு. * ௧ *

முன்னரேசாநாண்முனிதக்கமூப்புள
பின்னரும்பீடழிக்குநோயுளகொன்னே
பரவன்மின்பற்றன்மின்பாத்துண்மின்யாதுங்
கரவன்மின்கைத்துண்டாம்போழ்து. * ௨ *

நடுக்குற்றுத்தற்சேர்ந்தார்துன்பந்துடையார்
கொடுத்துத்தான்றுய்ப்பினுமீண்டுங்காலீண்டு
மிடுக்குற்றுப்பற்றினுநில்லாதுசெல்வம்
விடுக்கும்வினையுலந்தக்கால். * ௩ *

இம்மியரிசித்துணையானும்வைகலு
நும்மிலியைவகொடுத்துண்மினும்மைக்
கொடாஅதவரென்பர்குண்டுநீர்வையத்
தடாஅவடுப்பினவர். * ௪ *

மறுமையுமிம்மையுநோக்கியொருவற்
குறுமாறியைவகொடுத்தல்வறுமையா
லீதலிசையாதெனினுமிரவாமை
யீதலிரட்டியுறும், * ௫ *

நடுவூருள்வேதிகைச்சுற்றுக்கோட்புக்க
படுபனையன்னர்பலர்நச்சவாழ்வார்
குடிகொழுத்தக்கண்ணுங்கொடுத்துண்ணாமாக்க
ளிடுகாட்டுளேற்றுப்பனை. * ௬ *

பெயற்பான்மழைபெய்யாக்கண்ணுமுலகஞ்
செயற்பாலசெய்யாவிடினுங்கயற்புலால்
புன்னைகடியும்பொருகடற்றண்சேர்ப்ப
வென்னையுலகுய்யுமாறு. * ௭ *

ஏற்றகைமாற்றாமையென்னானுந்தாம்வரையா
தாற்றாதார்க்கீவதாமாண்கடனாற்றின்
மலிகடற்றண்சேர்ப்பமாறீவார்க்கீதல்
பொலிகடனென்னும்பெயர்த்து. * ௮ *

இறப்பச்சிறிதென்னாதில்லென்னாதென்று
மறப்பயன்யார்மாட்டுஞ்செய்கமுறைப்புதவி
ஐயம்புகூஉந்தவசிகடிஞைபோற்
பையநிறைத்துவிடும். * ௯ *

கடிப்பிடுகண்முரசங்காதத்தோர்கேட்ப
ரிடித்துமுழங்கியதோர்யோசனையோர்கேட்ப
ரடுக்கியமூவுலகுங்கேட்குமேசான்றோர்
கொடுத்தாரெனப்படுஞ்சொல். * ௰ * அதி. ௰.

பல்லாவுளுய்த்துவிடினுங்குழக்கன்று
வல்லதாந்தாய்நாடிக்கோடலைத்தொல்லைப்
பழவினையுமன்னதகைத்தேதற்செய்த
கிழவனைநாடிக்கொளற்கு. * ௧ *

உருவுமிளமையுமொண்பொருளுமுட்கு
மொருவழிநில்லாமைகண்டுமொருவழி
யொன்றேயுமில்லாதான்வாழ்க்கையுடம்பிட்டு
நின்றுவீழ்ந்தக்கதுடைத்து. * ௨ *

வளம்படவேண்டாதார்யாருமில்லை
யளந்தனபோகமவரவராற்றான்
விளங்காய்திரட்டினாரில்லைக்களங்கனியைக்
காரெனச்செய்தாருமில். * ௩ *

உறற்பாலநீக்கலுறுவர்க்குமாகா
பெறற்பாலனையவுமன்னவாமாரி
வறப்பிற்றருவாருமில்லையதனைச்
சிறப்பிற்றணிப்பாருமில். * ௪ *

தினைத்துணையராகித்தந்தேசுள்ளடக்கிப்
பனைத்துணையார்வைகலும்பாடழிந்துவாழ்வர்
நினைப்பக்கிடந்ததெவனுண்டாமேலை
வினைப்பயனல்லாற்பிற. * ௫ *

பல்லான்றகேள்விப்பயனுணர்வார்வீயவுங்
கல்லாதார்வாழ்வதறிதிரேற்கல்லாதார்
சேதனமென்னுமச்சேறகத்தின்மையாற்
கோதென்றுகொள்ளாதாங்கூற்று. * ௬ *

இடும்பைகூர்நெஞ்சத்தாரெல்லாருங்காண
நெடுங்கடைநின்றுழல்வதெல்லாமடம்பப்பூ
வன்னங்கிழிக்குமலைகடற்றண்சேர்ப்ப
முன்னைவினையாய்விடும் * ௭ *

அறியாருமல்லாறிவதறிந்தும்
பழியோடுபட்டவைசெய்தல்வளியோடி
நெய்தனறவுயிர்க்குநீள்கடற்றண்சேர்ப்ப
செய்தவினையான்வரும். * ௮ *

ஈண்டுநீர்வையத்துளெ.ல்லாருமெத்துணையும்
வேண்டார்மற்றீயவிழைபயனல்லவை
வேண்டினும்வேண்டாவிடினுமுறற்பால
தீண்டாவிடுதலரிது * ௯ *

சிறுகாபெருகாமுறைபிறழ்ந்துவாரா
வுறுகாலத்தூற்றாகாவாமிடத்தேயாகுஞ்
சிறுகாலைப்பட்டபொறியுமதனால்
விறுகாலத்தென்னைபரிவு. * ௰ * அதி- ௱௰.

இசையாவொருபொருளில்லென்றல்யார்க்கும்
வசையன்றுவையத்தியற்கைநசையழுங்க
நின்றோடிப்பொய்த்தனிரைதொடீஇசெய்ந்நன்றி
கொன்றாரிற்குற்றமுடைத்து. * ௧ *

தக்காருந்தக்கவரல்லாருந்தந்நீர்மை
யெக்காலுங்குன்றலிலராவரக்காரம்
யாவரேதின்னினுங்கையாதாங்கைக்குமாந்
தேவரேதின்னினும்வேம்பு. * ௨ *

காலாடுபோழ்திற்கழிகிளைஞர்வானத்து
மேலாடுமீனிற்பலராவரேலா
விடரொருவருற்றக்காலீர்ங்குன்றநாட
தொடர்புடையேமென்பார்சிலர். * ௩ *

வடுவிலாவையத்துமன்னியமூன்றி
னடுவணதெய்தவிருதலையுமெய்து
நடுவணதெய்தாதானெய்துமுலைப்பெய்
தடுவதுபோலுந்துயர். * ௪ *

நல்லாவின்கன்றாயினாகும்விலைபெறூஉங்
கல்லாரேயாயினுஞ்செல்வர்வாய்ச்சொற்செல்லும்
புல்லீரப்போழ்தினுழவேபோன்மீதாடிச்
செல்லாவாநல்கூர்ந்தார்சொல். * ௫ *

இடம்படமெய்ஞ்ஞானங்கற்பினுமென்று
மடங்காதாரென்றுமடங்கார்தடங்கண்ணா
யுப்பொடுநெய்பால்தயிர்காயம்பெய்தடினுங்
கைப்பறாப்பேய்ச்சுரையின்காய். * ௬ *

தம்மையிகழ்ந்தாரைத்தாமவரின்முன்னிகழ்க
என்னையவரோடுபட்டதுபுன்னை
விறற்பூங்கமழ்கானல்வீங்குநீர்ச்சேர்ப்ப
வுறற்பாலயார்க்குமுறும். * ௭ *

ஆவேறுருவினவாயினுமாபயந்த
பால்வேறுருவினவல்லவாம்பால்போ
லொருதன்மைத்தாகுமறநெறியாபோ
லுருவுபலகொளலிங்கு. * ௮ *

யாஅருலகத்தோர்சொல்லில்லார்தேருங்கால்
யாஅருபாயத்தின்வாழாதார்யாஅ
ரிடையாகவின்னாதசெய்யாதார்யாஅர்
கடைபோகச்செல்வமுய்த்தார். * ௯ *

தாஞ்செய்வினையல்லாற்றம்மொடுசெல்வதுமற்
றியாங்கணுந்தேரிற்பிறிதில்லையாங்குத்தாம்
போற்றிப்புனைந்தவுடம்பும்பயமின்றே
கூற்றங்கொண்டோடும்பொழுது. * ௰ * ஆ ௱௨௰.

—o—

துக்கத்துட்டூங்கித்துறவின்கட்சேர்கலா
மக்கட்பிணத்தசுடுகாடுதொக்க
விலங்கிற்கும்புள்ளிற்குங்காடேபுலன்கெட்ட
புல்லறிவாளர்வயிறு. * ௧ *

இரும்பார்க்குங்காலராயேதிலார்க்காளாய்க்
கரும்பார்கழனியுட்சேர்வர்சுரும்பார்க்குங்
காட்டுளாய்வாழுஞ்சிவலுங்குறும்பூழுங்
கூட்டுளாய்க்கொண்டுவைப்பார். * ௨ *

அக்கேபோலங்கையொழியவிரலழுகித்
துக்கத்தொழுநோயெழுபவேயக்கா
லலவனைக்காதலித்துக்கான்முரித்துத்தின்ற
பழவினைவந்தடைந்தக்கால். * ௩ *

நெருப்பழற்சேர்ந்தக்கானெய்போல்வதூஉ
மெரிப்பச்சுட்டெவ்வநோயாக்கும்பரப்பக்
கொடுவினையராகுவர்கோடாருங்கோடிக்
கடுவினையராகியார்ச்சார்ந்து. * ௪ *

பெரியவர்கேண்மைபிறைபோலநாளும்
வரிசைவரிசையாநந்தும்வரிசையால்
வானூர்மதியம்போல்வைகலுந்தேயுமே
தானேசிறியார்தொடர்பு. * ௫ *

குஞ்சியழகுங்கொடுந்தானைக்கோட்டழகு
மஞ்சளழகுமழகல்லநெஞ்சத்து
நல்லம்யாமென்னுநடுவுநிலைமையாற்
கல்வியழகேயழகு. * ௧ *

இம்மைபயக்குமாலீயக்குறைவின்றாற்
றம்மைவிளக்குமாற்றாமுளராக்கேடின்றா
லெம்மையுலகத்தும்யாங்காணேங்கல்விபோன்
மம்மாறுக்குமருந்து. * ௨ *

களர்நிலத்துப்பிறந்தவுப்பினைச்சான்றோர்
விளைநிலத்துநெல்லின்விழுமிதாக்கொள்வர்
கடைநிலத்தோராயினுங்கற்றுணர்ந்தோரைத்
தலைநிலத்துவைக்கப்படும். * ௩ *

வைப்புழிக்கோட்படாவாய்த்தீயிற்கேடில்லை
மிக்கசிறப்பினரசர்செறின்வவ்வா
ரெச்சமெனவொருவன்மக்கட்குச்செய்வன
விச்சைமற்றல்லபிற. * ௪ *

கல்விகரையிலகற்பவர்நாள்சில
மெல்லநினைக்கிற்பிணிபலதெள்ளிதி
னாராய்ந்தமைவுடையகற்பவேநீரொழியப்
பாலுண்குருகிற்றெரிந்து. * ௫ *

தோணியியக்குவான்றொல்லைவருணத்துக்
காணிற்கடைப்பட்டானென்றிகழார்காணா
யவன்றுணையாவாறுபோயற்றேநூல்கற்ற
மகன்றுணையாநல்லகொளல். * ௬ *

தவலருந்தொல்கேள்வித்தன்மையுடையா
ரிகலிலரெஃகுடையார்தம்முட்குழீஇ
நகலினினிதாயிற்காண்பாமகல்வானத்
தும்பருறைவார்பதி. * ௭ *

கனைகடற்றண்சேர்ப்பகற்றறிந்தார்கேண்மை
நுனியிற்கரும்புதின்றற்றே நுனிநீக்கித்
தூரிற்றின்றன்னதகைத்தரோபண்பிலா
வீரமிலாளர்தொடர்பு. * ௮ *

கல்லாரேயாயினுங்கற்றாரைச்சேர்ந்தொழுகி
னல்லறிவுநாளுந்தலைப்படுவர்தொல்சிறப்பி
னொண்ணிறப்பாதிரிப்பூச்சேர்தலாற்புத்தோடு
தண்ணீர்க்குத்தான்பயந்தாங்கு. * ௯ *

அலகுசால்கற்பினறிவுநூல்கல்லா
துலகநூலோதுவதெல்லாங்கலகல
கூஉந்துணையல்லாற்கொண்டுதடுமாற்றம்
போஒந்துணையறிவாரில். * ௰ * ஆ. ௱௪௰.

உடுக்கையுலறியுடம்பழிந்தக்கண்ணுங்
குடிப்பிறப்பாளர்தங்கொள்கையிற்குன்றா
ரிடுக்கண்டலைவந்தக்கண்ணுமரிமா
கொடிப்புற்கறிக்குமோமற்று. * க *

சான்றாண்மைசாயலொழுக்கமிவைமூன்றும்
வான்றோய்குடிப்பிறந்தார்க்கல்லதுவான்றோயு
மைதவழ்வெற்படாஅப்பெருஞ்செல்வ
மெய்தியக்கண்ணும்பிறர்க்கு. * உ *

இருக்கையெழலுமெதிர்செலவுமேனை
விடுப்பவொழிதலோடின்னகுடிப்பிறந்தார்
குன்றாவொழுக்கமாக்கொண்டார்கயவரோ
டொன்றாவுணரற்பாற்றன்று. * ங *

நல்லவைசெய்யினியல்பாகுந்தீயவை
பல்லவர்தூற்றும்பழியாகுமெல்லா
முணருங்குடிப்பிறப்பினூதியமென்னோ
புணருமொருவர்க்கெனின். * ச *

கல்லாமையச்சங்கயவர்தொழிலச்சஞ்
சொல்லாமையுள்ளுமோர்சோர்வச்சமெல்லா
மிரப்பார்க்கொன்றீயாமையச்சமரத்தாரிம்
மாணாக்குடிப்பிறந்தார். * ரு *

இனநன்மையின்சொலொன்றீதன்மற்றேனை
மனநன்மையென்றிவையெல்லாங்கனமணி
முத்தோடிமைக்குமுழங்குவரித்தண்சேர்ப்ப
விற்பிறந்தார்கண்ணேயுள. * ௬ *

செய்கையழிந்துசிதன்மண்டிற்றாயினும்
பெய்யாவொருசிறைபேரிலுடைத்தாகு
மெவ்வமுழந்தக்கடைத்துங்குடிப்பிறந்தார்
செய்வர்செயற்பாலவை. * ௭ *

ஒருபுடைபாம்புகொளினுமொருபுடை
யங்கண்மாஞாலம்விளக்குறூஉந்திங்கள்போற்
செல்லாமைசெவ்வனேர்நிற்பினுமொப்புரவிற்
கொல்கார்குடிப்பிறந்தார். * ௮ *

செல்லாவிடத்துங்குடிப்பிறந்தார்செய்வன
செல்லிடத்துஞ்செய்யார்சிறியவர்புல்வாய்
பருமம்பொறுப்பினும்பாய்பரிமாபோற்
பொருமுரணாற்றுதலின்று. * ௯ *

எற்றொன்றுமில்லாவிடத்துங்குடிப்பிறந்தா
ரற்றத்தற்சேர்ந்தார்க்கசைவிடத்தூற்றுவ
ரற்றக்கடைத்துமகல்யாறகழ்ந்தக்காற்
றெற்றெனத்தெண்ணீர்படும். * ௰ * ஆக ௱௫௰.

அங்கண்விசும்பினகனிலாப்பாரிக்குந்
திங்களுஞ்சான்றோருமொப்பர்மற்றிங்கண்
மறுவாற்றுஞ்சான்றோரஃதாற்றார்தெருமந்து
தேய்வரொருமாசுறின். * ௧ *

இசையுமெனினுமிசையாதெனினும்
வசைதீரவெண்ணுவர்சான்றோர்விசையி
னரிமாவுளங்கிழித்தவம்பினிற்றீதோ
வரிமாப்பிழைப்பெய்தகோல். * ௨ *

நரம்பெழுந்துநல்கூர்ந்தாராயினுஞ்சான்றோர்
குரம்பெழுந்துகுற்றங்கொண்டேறாருரங்கவறா
வுள்ளமெனுநாரினாற்கட்டியுளவரையாற்
செய்வர்செயற்பாலவை. * ௩ *

செல்வுழிக்கண்ணொருநாட்காணினுஞ்சான்றவர்
தொல்வழிக்கேண்மையிற்றோன்றப்புரிந்தியாப்பர்
நல்வரைநாடசிலநாளடிப்படிற்
கல்வரையுமுண்டாநெறி. * ௪ *

புல்லாவெழுத்திற்பொருளில்வறுங்கோட்டி
கல்லாவொருவனுரைப்பவுங்கண்ணோடி
நல்லார்வருந்தியுங்கேட்பரேமற்றவன்
பல்லாருணாணல்பரிந்து. * ௫ *

கடித்துக்கரும்பினைக்கண்டகரநூறி
யிடித்துநீர்கொள்ளினுமின்சுவைத்தேயாகும்
வடுப்படவைதிறந்தக்கண்ணுங்குடிப்பிறந்தார்
கூறார்தம்வாயிற்சிதைந்து. * ௬ *

கள்ளார்கள்ளுண்ணார்கடிவகடிந்தொரீஇ
யெள்ளிப்பிறரையிகழ்ந்துரையார்தள்ளியும்
வாயிற்பொய்கூறார்வடுவறுகாட்சியார்
சாயிற்பரிவதிலர். * ௭ *

பிறர்மறையின்கட்செவிடாய்த்திறனறிந்
தேதிலாரிற்கட்குருடனாய்த்தீய
புறங்கூற்றின்மூங்கையாய்நிற்பானேல்யாது
மறங்கூறவேண்டாவவற்கு * ௮ *

பன்னாளுஞ்சென்றக்காற்பண்பிலார்தம்முழை
யென்னானும்வேண்டுபவென்றிகழ்பவென்னானும்
வேண்டினுநன்றுமற்றென்றுவிழுமியோர்
காண்டொறுஞ்செய்வர்சிறப்பு. * ௯ *

உடையாரிவரொன்றொருதலையாப்பற்றிக்
கடையாயார்பின்சென்றுவாழ்வருடைய
பிலந்தலைப்பட்டதுபோலாதேநல்ல
குலந்தலைப்பட்டவிடத்து. * ௰ * ஆக ௱௬௰.

பொறுப்பவென்றெண்ணிப்புரைதீர்ந்தார்மாட்டும்
வெறுப்பனசெய்யாமைவேண்டும்வெறுத்தபி
னார்க்குமருவியணிமலைநன்னாட
பேர்க்குதல்யார்க்குமரிது. * ௧ *

பொன்னேகொடுத்தும்புணர்தற்கரியாரைக்
கொன்னேதலைக்கூடப்பெற்றிருந்துமன்னோ
பயனில்பொழுதாக்கழிப்பரேநல்ல
நயமிலறிவினவர். * ௨ *

அவமதிப்புமான்றமதிப்புமிரண்டு
மிகைமக்களான்மதிக்கற்பாலநயமுணராக்
கையறியாமாக்களிழிப்புமெடுத்தேத்தும்
வையார்வடித்தநூலார். * ௩ *

விரிநிறநாகம்விடருளதேனு
முருமின்கடுஞ்சினஞ்சேணின்றுமுட்கு
மருமையுடையவரண்சேர்ந்துமுய்யார்
பெருமையுடையார்செறின். * ௪ *

எம்மையறிந்திலிரெம்போல்வாரில்லென்று
தம்மைத்தாங்கொள்வதுகோளன்றுதம்மை
யரியாராநோக்கியறனறியுஞ்சான்றோர்
பெரியாராக்கொள்வதுகோள். * ௫ *

நளிகடற்றண்சேர்ப்பநாணிழற்போல
விளியுஞ்சிறியவர்கேண்மைவிளிவின்றி
யல்குநிழற்போலகன்றகன்றோடுமே
தொல்புகழாளர்தொடர்பு. * ௬ *

மன்னர்திருவுமகளிரெழினலமுந்
துன்னியார்துய்ப்பர்தகல்வேண்டாதுன்னிக்
குழைகொண்டுதாழ்ந்தகுளிர்மரமெல்லா
முழைதங்கட்சென்றார்க்கொருங்கு. * ௭ *

தெரியத்தெரியுந்தெரிவிலார்கண்ணும்
பிரியப்பெரும்படர்நோய்செய்யும்பெரிய
வுலவாவிருங்கழிச்சேர்ப்பயார்மாட்டுங்
கலவாமைகோடியுறும். * ௮ *

கல்லாதுபோகியநாளும்பெரியவர்கட்
செல்லாதுவைகியவைகலுமொல்வ
கொடாஅதொழிந்தபகலுமுரைப்பிற்
படாஅவாம்பண்புடையார்கண். * ௯ *

பெரியார்பெருமைசிறுதகைமையொன்றிற்
குரியாருரிமையடக்கந்தெரியுங்காற்
செல்வமுடையாருஞ்செல்வரேதற்சேர்ந்தா
ரல்லல்களைபவெனின். * ௰ *

அறியாப்பருவத்தடங்காரோடொன்றி
நெறியல்லசெய்தொழுகியவ்வநெறியறிந்து
நற்சார்வுசாரக்கெடுமேவெயின்முறுகப்
புற்பனிப்பற்றுவிட்டாங்கு. * ௧ *

அறிமினறநெறியஞ்சுமின்கூற்றம்
பொறுமின்பிறர்கடுஞ்சொற்போற்றுமின்வஞ்சம்
வெறுமின்வினைதீயார்கேண்மையெஞ்ஞான்றும்
பெறுமின்பெரியார்வாய்ச்சொல். * ௨ *

அடைந்தார்ப்பிரிவுமரும்பிணியுங்கேடு
முடங்குடம்புகொண்டார்க்குறலாற்றொடங்கிப்
பிறப்பின்னாதென்றுணரும்பேரறிவினாரை
யுறப்புணர்கவம்மாவென்னெஞ்சு. * ௩ *

இறப்பநினையுங்காலின்னாதெனினும்
பிறப்பினையாருமுனியார்பிறப்பினுட்
பண்பாற்றுநெஞ்சத்தவர்களோடெஞ்ஞான்று
நண்பாற்றிநட்கப்பெறின். * ௪ *

ஊரங்கணநீருரவுநீர்ச்சேர்ந்தக்காற்
பேரும்பிறிதாகித்தீர்த்தமாமோருங்
குலமாட்சியில்லாருங்குன்றுபோனிற்பர்
நலமாட்சிநல்லாரைச்சார்ந்து. * ௫ *

ஒண்கதிர்வாண்மதியஞ்சேர்தலாலோங்கிய
வங்கண்விசும்பின்முயலுந்தொழப்படூஉங்
குன்றியசீர்மையராயினுஞ்சீர்பெறுவர்
குன்றன்னார்கேண்மைகொளின். * ௬ *

பாலோடளாயநீர்பாலாகுமல்லது
நீராய்நிறந்தெரிந்துதோன்றாதாந்தேரிற்
சிறியார்சிறுமையுந்தோன்றாதாநல்ல
பெரியார்பெருமையைச்சார்ந்து. * ௭ *

கொல்லையிரும்புனத்துக்குற்றியடைந்தபு
லொல்காவேயாகுமுழவருழுபடைக்கு
மெல்லியரேயாயினுநற்சார்வுசார்ந்தார்மேற்
செல்லாவாஞ்செற்றார்சினம். * ௮ *

நிலநலத்தானந்தியநெல்லேபோற்றத்தங்
குலநலத்தாலாகுவர்சான்றோர்கலநலத்தைத்
தீவளிசென்றுசிதைத்தாங்குச்சான்றாண்மை
தீயினஞ்சேரக்கெடும். * ௯ *

மனத்தான்மறுவிலரேனுந்தாஞ்சேர்ந்த
வினத்தாலிகழப்படுவர்புனத்து
வெறிகமழ்சந்தனமும்வேங்கையும்வேமே
வெறிபுனந்தீப்பட்டக்கால். * ௰ * ஆ௨ ௱ ௬ம.

ஈதலிசையாதிளமைசேணீங்குதலாற்
காதலவருங்கருத்தல்லர்காதலித்
தாதுநாமென்னுமவாவினைக்கைவிட்டுப்
போவதேபோலும்பொருள். * க *

இற்சார்வினேமாந்தேமீங்கமைந்தேமென்றெண்ணிப்
பொச்சாந்தொழுகுவர்பேதையாரச்சார்வு
நின்றனபோன்றுநிலையாவெனவுணர்ந்தா
ரொன்றும்பரிவிலர். * உ *

மறுமைக்குவித்துமயலின்றிச்செய்து
சிறுமைப்படாதேநீர்வாழ்மினறிஞராய்
நின்றுழிநின்றேநிறம்வேறாங்காரண
மின்றிப்பலவுமுள. * ௩ *

உறைப்பருங்காலத்துமூற்றுநீர்க்கேணி
யிறைத்துணினுமூராற்றுமென்பர்கொடைக்கடனுஞ்
சாஅயக்கண்ணும்பெரியார்போன்மற்றையா
ராஅயக்கண்ணுமரிது. * ௪ *

உறுபுனறந்துலகூட்டியறுமிடத்துங்
கல்லூற்றுழியூறுமாறேபோற்செல்வம்
பலர்க்காற்றிக்கெட்டுலந்தக்கண்ணுஞ்சிலர்க்காற்றிச்
செய்வர்செயற்பாலவை. * ௫ *

## பெருமை.

பெருவரைநாடபெரியார்கட்டீமை
கருநரைமேற்சூடேபோற்றோன்றுங்கருநரையைக்
கொன்றன்னவின்னாசெயினுஞ்சிறியார்மே
லொன்றானுந்தோன்றாகெடும். * ௬ *

இசைந்தசிறுமையியல்பிலாதார்கட்
பசைந்ததுணையும்பரிவாமசைந்த
நகையேயும்வேண்டாதநல்லறிவினார்கட்
பகையேயும்பாடுபெறும். * ௭ *

மெல்லியநல்லாருள்மென்மையதுவிறந்
தொன்னாருட்கூற்றுட்குமுட்குடைமையெல்லாஞ்
சலவருட்சாலச்சலமேநலவரு
ணன்மைவரம்பாய்விடல். * ௮ *

கடுக்கியொருவன்கடுங்குறளைபேசி
மயக்கிவிடினுமனப்பிரிப்பொன்றின்றித்
துளக்கமிலாதவர்தூயமனத்தார்
விளக்கினுளொண்சுடரேபோன்று. * ௯ *

முறை[illegible]ருமறஞ்செய்து
பிறர்க்[illegible]தவர்சால்றவாத்[illegible]
முட்டுற்றநீக்கிமுடியுமளவெல்லாந்
துக்கத்துணீக்கிவிடும். * ௰ *

[illegible]

கோளாற்றக்கொள்ளாக்குளத்தின்கீழ்ப்பைங்கூழ்போற்
கேளீவதுண்டுகிளைகளோதுஞ்சுவ
வாளாடுகூத்தியர்கண்போற்றடுமாறுந்
தாளாளர்க்குண்டோதவறு. * ௧ *

ஆடுகோடாகியதரிடைநின்றதூஉங்
காழ்கொண்டகண்ணேகளிறணைக்குங்கந்தாகும்
வாழ்தலுமன்னதகைத்தேயொருவன்றான்
றாழ்வின்றித்தன்னைச்செயின். * ௨ *

உறுபுலியூனிரையின்றியொருநாட்
சிறுதேரைபற்றியுந்தின்னுமறிவினாற்
காற்றொழிலென்றுகருதற்கவையினான்
மேற்றொழிலுமாங்கேமிகும். * ௩ *

இசையாதெனினுமியற்றியோராற்ற
லசையாதுநிற்பதாமாண்மையிசையுங்காற்
கண்டிராயக்குங்கானலந்தண்சேர்ப்ப
பெண்டிரும்வாழாரோமற்று. * ௪ *

நல்லகுலமென்றுந்தீயகுலமென்றுஞ்
சொல்லளவல்லாற்பொருளில்லைத்தொல்சிறப்பி
னொண்பொருளொன்றோதவங்கல்வியாள்வினை
யென்றிவற்றானாகுங்குலம். * ௫ *

[illegible]

( ௨௰ ) தாளாண்மை

ஆற்றுந்துணையுமறிவினையுள்ளடக்கி
யூக்கமுரையாருணர்வுடையாரூக்க
முறுப்பினாலாராயுமொண்மையுடையார்
குறிப்பின்கீழ்ப்பட்டதுலகு. * ௬ *

சிதலைதினப்பட்டவாலமரத்தை
மதலையாய்மற்றதன்வீழூன்றியாங்குக்
குதலைமைதந்தைகட்டோன்றிற்றான்பெற்ற
புதல்வன்மறைப்பக்கெடும். * ௭ *

ஈனமாயில்லிருந்தின்றிவிளியினு
மானந்தலைவருவசெய்பவோயானை
வரிமுகம்புண்படுக்கும்வள்ளுகிர்நோன்றா
ளரிமாமதுகையவர். * ௮ *

தீங்கரும்பீன்றதிரள்காலுளையலரி
தேங்கமழ்நாற்றமிழந்தாஅங்கோங்கு
முயர்குடியுட்பிறப்பினென்னாம்பெயர்பொறிக்கும்
பேராண்மையில்லாக்கடை. * ௯ *

பெருமுத்தரையர்பெரிதுவந்தீயுங்
கருனைச்சோறார்வர்கயவர்கருனையைப்
பேருமறியார்நனிவிரும்புதாளாண்மை
நீருமமிழ்தாய்விடும். * ௰ *

வயாவும்வருத்தமுமீன்றக்கானோவுங்
கவாஅன்மகற்கண்டுதாய்மறந்தாஅங்
கசாஅத்தானுற்றவருத்தமுசாஅத்தன்
கேளிரைக்காணக்கெடும். * ௧ *

அழன்மண்டுபோழ்தினடைந்தவர்கட்கெல்லா
நிழன்மரம்போனேரொப்பத்தாங்கிப்பழுமரம்போற்
பல்லார்பயன்றுய்ப்பத்தான்வருந்திவாழ்வதே
நல்லாண்மகற்குக்கடன். * ௨ *

அடுக்கன்மலைநாடதற்சேர்ந்தவரை
யெடுக்கலமென்னார்பெரியோரடுத்தடுத்து
வன்காய்பலபலகாய்ப்பினுமில்லையே,
தன்காய்பொறுக்கலாக்கொம்பு. * ௩ *

உலகறியத்தீரக்கலப்பினுநில்லா
சிலபகலாஞ்சிற்றினத்தார்கேண்மைநிலைதிரியா
நிற்கும்பெரியோர்நெறியடையநின்றனைத்தா
லொற்கமிலாளர்தொடர்பு. * ௪ *

இன்னரினையரெமர்பிறரென்னுஞ்சொ
லென்றுமிலராமியல்பினாற்றுன்னித்
தொலைமக்கடுன்பந்தீர்ப்பாரேயார்மாட்டுந்
தலைமக்களாகற்பாலார். * ௫ *

பொற்கலத்துப்பெய்தபுலியுகிர்வான்புழுக்க
லக்காரம்பாலோடமரார்கைத்துண்டலி
னுப்பிலிப்புற்கையுயிர்போற்கிளைஞர்மாட்
டெக்கலத்தானுமினிது. * ௬ *

நாள்வாய்ப்பெறினுந்தன்னள்ளாதாரில்லத்து
வேளாண்மைவெங்கருனைவேம்பாகுங்கேளா
யடாரநப்போழ்திணடகிடுவரோனுந்
தமராயார்மாட்டேயினிது. * ௭ *

முட்டிகைபோலமுனியாதுவைகலுங்
கொட்டியுண்பாருங்குறடுபோற்கைவிடுவர்
சுட்டுக்கோல்போலவெரியும்புகுவரே
நட்டாரெனப்படுவார். * ௮ *

நறுமலர்த்தண்கோதாய்நட்டார்க்குநட்டார்
மறுமையுஞ்செய்வதொன்றுண்டோவிறுமளவு
மின்புறுவவின்புற்றெழீஇயவரொடு
துன்புறுவதுன்புறுக்கால். * ௯ *

விருப்பிலாரில்லத்துவேறிருந்துண்ணும்
வெருக்குக்கண்வெங்கருனைவேம்பாம்விருப்புடைத்
தன்போல்வாரில்லுட்டயங்குநீர்த்தண்புற்கை
யென்போடியைந்தவமிழ்து. * ௰ * ௮௨ ௨௱௰.

கருத்துணர்ந்துகற்றறிந்தார்கேண்மையெஞ்ஞான்றுங்
குருத்திற்கரும்புதின்றற்றேகுருத்திற்
கெதிர்செலத்தின்றன்னதகைத்தரோவென்று
மதுரமிலாளர்தொடர்பு. * ௧ *

இற்பிறப்பெண்ணியிடைதிரியாரென்பதோர்
நற்புடைக்கொண்டமையல்லதுபொற்கேழ்
புனலொழுகப்புள்ளிரியும்பூங்குன்றநாட
மனமறியப்பட்டதொன்றன்று. * ௨ *

யானையனையவர்நண்பொரீஇநாயனையார்
கேண்மைகெழீஇக்கொளல்வேண்டும்யானை
யறிந்தறிந்தும்பாகனையேகொல்லுமெறிந்தவேல்
மெய்யதாவால்குழைக்குநாய். * ௩ *

பலநாளும்பக்கத்தாராயினுநெஞ்சிற்
சிலநாளுமொட்டாரோடொட்டார்பலநாளு
நீத்தாரெனக்கைவிடலுண்டோதன்னெஞ்சத்
தியாத்தாரோடியாத்ததொடர்பு. * ௪ *

கோட்டுப்பூப்போலமலர்ந்துபிற்கூம்பாது
வேட்டதேவேட்டதாநட்பாட்சிதோட்ட
கயப்பூப்போன்முன்மலர்ந்துபிற்கூம்புவாரை
நயப்பாருநட்பாருமில். * ௫ *

கடையாயார்நட்பிற்கமுகனையரேனை
யிடையாயார்தெங்கினனையர்தலையாயா
ரெண்ணரும்பெண்ணைபோன்றிட்டஞான்றிட்டதே
தொன்மையுடையார்தொடர்பு. * ௫ *

கழுநீருட்காரடகேனுமொருவன்
விழுமிதாக்கொள்ளினமிழ்தாம்விழுமிய
குய்த்துவையார்வெண்சோறேயாயினுமேவாதார்
கைத்துண்டல்காஞ்சிரங்காய். * ௬ *

நாய்க்காற்சிறுவிரல்போனன்கணியராயினு
மீக்காற்றுணையுமுதவாதார்நட்பென்னாஞ்
சேய்த்தானுஞ்சென்றுகொளல்வேண்டுஞ்செய்விளைக்கும்
வாய்க்காலனையார்தொடர்பு * ௭ *

தெளிவிலார்நட்பிற்பகைநன்றுசாதல்
விளியாவருநோயினன்றாலளிய
விகழ்தலிற்கோறலினிதேமற்றில்ல
புகழ்தலின்வைதலேநன்று. * ௮ *

மரீஇப்பலரோடுபன்னாண்மயங்கிப்
பொரீஇப்பொருட்டக்கார்க்கோடலேவேண்டும்
பரீஇயுயிர்செகுக்கும்பாம்பொடுமின்னா
மரீஇப்பின்னைப்பிரிவு. * ௰ * ஆ. ௨௱௨௰.

நல்லாரெனத்தானனிவிரும்பிக்கொண்டாரை
யல்லாரெனினுமடக்கிக்கொளல்வேண்டு
நெல்லுக்குமியுண்டுநீர்க்குநுரையுண்டு
புல்லிதழ்பூவிற்குமுண்டு. * ௧ *

செறுத்தோறுடைப்பினுஞ்செம்புனலோடூடார்
மறுத்துஞ்சிறைசெய்வர்நீர்நசைவாழ்நர்
வெறுப்பவெறுப்பச்செயினும்பொறுப்பரே
தாம்வேண்டிக்கொண்டார்தொடர்பு. * ௨ *

இறப்பவேதீயசெயினுந்தன்னட்டார்
பொறுத்தறுவதொன்றன்றோநிறக்கோங்
குருவவண்டார்க்குமுயர்வரைநாட
வொருவர்பொறையிருவர்நட்பு. * ௩ *

மடிதிரைதந்திட்டவான்கதிர்முத்தங்
கடுயிசைநாவாய்கரையலைக்குஞ்சேர்ப்ப
விடுதற்கரியாரியல்பிலரேனெஞ்சஞ்
சுடுதற்குமூட்டியதீ. * ௪ *

இன்னாசெயினும்விடற்பாலரல்லாரைப்
பொன்னாகப்போற்றிக்கொளல்வேண்டும்பொன்னொடு
நல்லிற்சிதைத்ததீநாடொறுநாடித்தம்
மில்லத்திலாக்குதலால். * ௫ *

இன்னுசெயினும்விடுதற்கரியாரைத்
துன்னுத்துறத்தறகுவதோதுன்னருஞ்சீர்
விண்குத்துநீள்வரைவெற்பகளைபவோ
கண்குத்திற்றென்றுதங்கை. * ௬ *

இலங்குநீர்த்தண்சேர்ப்பவின்னுசெயினுங்
கலந்துபழிகாணுர்சான்றோர்கலந்தபிற்
றீமையெடுத்துரைக்குந்திண்ணறிவில்லாதார்
தாமுமவரிற்கடை. * ௭ *

எதிலார்செய்ததிறப்பவேதீதெனினு
நோதக்கதென்னுண்டாநோக்குங்காற்காதல்
கழுமியார்செய்தகறங்கருவிநாட
விழுமிதாநெஞ்சத்துணின்று. * ௮ *

தமரென்றுதாங்கொள்ளப்பட்டவர்தம்மைத்
தமரன்மைதாமறிந்தாராயினவரைத்
தமரினுநன்குமதித்துத்தமரன்மை
தம்முளடக்கிக்கொளல். * ௯ *

குற்றமுமேனைக்குணமுமொருவனை
நட்டபினாடித்திரிவேனேனட்டான்
மறைகாவாவிட்டவன்செல்வழிச்செல்க
வறைகடல்சூழ்வையநக. * ௰ * ஆக உ௱௩௰.

செறிப்பில்பழங்கூரைசேறணையாக
விறைத்துநீரேற்றுங்கிடப்பர்கறைக்குன்றம்
பொங்கருவிதாழும்புனல்வரைநன்னாட
தங்கருமமுற்றுந்துணை. * க *

சீரியார்கேண்மைசி றந்தசிறப்பிற்றாய்
மாரிபோன்மாண்டபயத்ததாமாரி
வறந்தக்காற்போலுமேவாலருவிநாட
சிறந்தக்காற்சீரிலார்நட்பு. * உ *

நுண்ணுணர்விஞரொடுகூடிநுகர்வுடைமை
விண்ணுலகேயொக்கும்விழைவிற்றானுண்ணூ
லுணர்விலராகியவூதியமில்லார்ப்
புணர்தனிரயத்துளொன்று. * ௩ *

பெருகுவதுபோலத்தோன்றிவைத்தீப்போ
லொருபொழுதுஞ்செல்லாதேநந்துமருகெல்லாஞ்
சந்தநநீள்சோலைச்சாரன்மலைநாட
பந்தமிலாளர்தொடர்பு. * ௪ *

செய்யாதசெய்துநாமென்றலுஞ்செய்வதனைச்
செய்யாதுதாழ்த்துக்கொண்டோட்டலுமெய்யாக
வின்புறூஉம்பெற்றியிகழ்ந்தார்க்குமந்நிலையே
துன்புறூஉம்பெற்றிதரும். * ௫ *

ஒருநீர்ப்பிறந்தொருங்குநீண்டக்கடைத்தும்
விரிநீர்க்குவளையையாம்பலொக்கல்லா
பெருநீரார்கேண்மைகொளினுநீரல்லார்
கருமங்கள்வேறுபடும். * ௬ *

முற்றற்சிறுமந்திமுற்பட்டதந்தையை
நெற்றுக்கண்டன்னவிரலானெருமிர்த்திட்டுக்
குற்றிப்பறிக்குமலைநாடவின்னாதே
யொற்றுமைக்கொள்ளாதார்நட்பு. * ௭ *

முட்டிற்றபோழ்தின்முடுகியென்னாருயிரை
நட்டானொருவன்கைநீட்டேனேனட்டான்
கடியனைகட்டழித்தான்செல்வழிச்செல்க
நெடுமொழிவையநக * ௮ *

ஆன்படுநெய்பெய்கலனுளதுகளைந்து
வேம்படுநெய்பெய்தனைத்தரோதேம்படு
நல்வரைநாடநயமுணர்வார்நண்பொரீஇப்
புல்லறிவினாரொடுநட்பு. * ௯ *

உருவிற்கமைந்தான்கணூராண்மையின்மை
பருகற்கமைந்தபானீரளாயற்றே
தெரிவுடையார்தீயினத்தாராகுதனாகம்
விரிபெடையோடாடிவிட்டற்று * ௰ * அ௨ ௨௱௪௰.

பகைவர்பணிவிடநோக்கித்தகவுடையார்
தாமேயுநாணித்தலைச்செல்லார்காணு
யிளம்பிறையாயக்காற்றிங்களைச்சேரா
தணங்கருந்துப்பினரா. * ௧ *

நளிகடற்றண்சேர்ப்பநல்கூர்ந்தமக்கட்
கணிகலமாவதடக்கம்பணிவில்சீர்
மாத்திரையின்றிநடக்குமேல்வாழூர்
கோத்திரங்கூறப்படும். * ௨ *

எந்நிலத்துவித்திடினுங்காஞ்சிரங்காழ்தெங்காகா
தென்னாட்டவருஞ்சுவர்க்கம்புகுதலாற்
றன்னாற்றானாகுமறுமைவடதிசையுங்
கொன்னாளர்சாலப்பலர். * ௩ *

வேம்பினிலையுட்கனியினும்வாழைதன்
றீஞ்சுவையாதுந்திரியாதாமாங்கே
யினந்தீதெனினுமியல்புடையார்கேண்மை
மனந்தீதாம்பக்கமரிது. * ௪ *

கடல்சார்ந்துமின்னீர்பிறக்குமலைசார்ந்து
முப்பீண்டுவாரிபிறத்தலாற்றத்த
மினத்தனையரல்லரெறிகடற்றண்சேர்ப்ப
மனத்தனையர்மக்களென்பார். * ௫ *

பராஅரைப்புன்னைபடுகடற்றண்சேர்ப்ப.
வொராஅலுமொட்டலுஞ்செய்பவோநல்ல
மரூஉச்செய்தியார்மாட்டுந்தங்குமநத்தார்
விராஅய்ச்செய்யாமைநன்று. * ௬ *

உணர்வுணருமுணர்வுடையாரைப்
புணரப்புணருமாமின்பம்புணரிற்
றெரியத்தெரியுந்தெரிவிலாதாரைப்
பிரியப்பிரியுமாநோய். * ௭ *

நன்னிலைக்கட்டன்னைநிறுப்பானுந்தன்னை
நிலைகலக்கிக்கீழிடுவானுநிலையினு
மேன்மேலுயர்த்துநிறுப்பானுந்தன்னைத்
தலையாகச்செய்வானுந்தான். * ௮ *

கருமவரிசையாற்கல்லாதார்பின்னும்
பெருமையுடையாருஞ்சேறல்லருமரபி
னோதமரற்றுமொலிகடற்றண்சேர்ப்ப
பேதைமையன்றதறிவு. * ௯ *

கருமமுமுட்படாப்போகமுந்துவ்வாத்
தருமமுந்தக்கார்க்கேசெய்யாவொருநிலையே
முட்டின்றிமூன்றுமுடியுமேலஃதென்ப
பட்டினம்பெற்றகலம். * ௰ * ஆக உ௱௫௰.

---

நுண்ணுணர்வின்மைவறுமையஃதுடைமை
பண்ணப்பணைத்தபெருஞ்செல்வமெண்ணுங்காற்
பெண்ணவாயாணிழந்தபேடியணியாளோ
கண்ணவாத்தக்ககலம். * ௧ *

பல்லான்றகேள்விப்பயனுணர்வார்பாடழிந்
தல்லலுழப்பதறிதிரேற்றொல்சிறப்பி
னாவின்கிழத்தியுறைதலாற்சேராளே
பூவின்கிழத்திபுலந்து. * ௨ *

கல்லென்றுதந்தைகழறவதனையோர்
சொல்லென்றுகொள்ளாதிகழ்ந்தவன்மெல்ல
வெழுத்தோலைபல்லார்முன்னீட்டவிளியா
வழுக்கோலைக்கொண்டுவிடும். * ௩ *

கல்லாதுநீண்டவொருவனுலகத்து
நல்லறிவாளரிடைப்புக்குமெல்ல
விருப்பினுநாயிருந்தற்றேயிராஅ
துரைப்பினுநாய்குரைத்தற்று. * ௪ *

புல்லாப்புன்கோட்டிப்புலவரிடைப்புக்குக்
கல்லாதசொல்லுங்கடையெலாங்கற்ற
கடாஅயினுஞ்சான்றவர்சொல்லார்பொருண்மேற்
படாஅவிடுபாக்கறிந்து. * ௫ *

கற்றறிந்தநாவினார்சொல்லார்தஞ்சோர்வஞ்சி
மற்றையராவார்பகர்வர்பனையின்மேல்
வற்றியவோலைகலகலக்குமெஞ்ஞான்றும்
பச்சோலைக்கில்லையொலி. * சு *

பன்றிக்கூழ்ப்பத்தரிற்றேமாவடித்தற்றா
னன்றறியாமாந்தர்க்கறத்தாறுரைக்குங்காற்
குன்றின்மேற்கொட்டுந்தறிபோற்றலைதகர்ந்து
சென்றிசையாவாகுஞ்செவிக்கு. * எ *

பாலாற்கழீஇப்பலநாளுணக்கினும்
வாலிதாம்பக்கமிருந்தைக்கிருந்தன்று
கோலாற்கடாஅய்க்குறினும்புகலொல்லா
நோலாவுடம்பிற்கறிவு. * அ *

பொழிந்தினிதுநாறினும்பூமிசைதல்செல்லா
திழிந்தவைகாமுறூஉமீப்போலிழிந்தவை
தாங்கலந்தநெஞ்சினார்க்கென்னாகுந்தக்கார்வாய்த்
தேன்கலந்ததேற்றசொற்றேர்வு. * கூ *

கற்றாருரைக்குங்கசடறுநுண்கேள்வி
பற்றாதுதன்னெஞ்சுதைத்தலான்மற்றுமோர்
தன்போலொருவன்முகநோக்கித்தானுமோர்
புன்கோட்டிகொள்ளுமாங்கீழ். * ௰ * ஆக உ௱சு௰.

---

அருகலதாகிப்பலபழுத்தக்கண்ணும்
பொரிதாள்விளவினைவாவல்குறுகா
பெரிதணியராயினும்பீடிலார்செல்வங்
கருதுங்கடப்பாட்டதன்று. * ௧ *

அள்ளிக்கொள்வன்னகுறுமுகிழ்வாயினுங்
கள்ளிமேற்கைநீட்டார்சூடும்பூவன்மையாற்
செல்வம்பெரிதுடையராயினுங்கீழ்களை
நள்ளாரறிவுடையார். * ௨ *

மல்குதிரையகடற்கோட்டிருப்பினும்
வல்லூற்றுவரிக்கிணற்றின்கட்சென்றுண்டர்
செல்வம்பெரிதுடையராயினுஞ்சேட்சென்று
நல்குவார்கட்டேநசை. * ௩ *

புணர்கடல்சூழ்வையத்துப்புண்ணியமோவேறே
யுணர்வதுடையாரிருப்பவுணர்விலா
வட்டும்வழுதுணையும்போல்வாரும்வாழ்வரே
பட்டுந்துகிலுமுடுத்து. * ௪ *

நல்லார்நயவரிருப்பநயமிலாக்
கல்லார்க்கொன்றாகியகாரணந்தொல்லை
வினைப்பயனல்லதுவேனெடுங்கண்ணாய்
நினைப்பவருவதொன்றில். * ௫ *

நாணுத்தகவுடையோனன்மலர்மேற்பொற்பாவாய்
நீணுய்நிலத்துவிளியரோவேணுய
புன்மக்கள்பக்கம்புகுவாய்நீபொன்போலு
நன்மக்கள்பக்கந்துறந்து. * ௬ *

நயவார்கணல்குரவுநாணின்றுகொல்லோ
பயவார்கட்செல்வம்பரம்பப்பயின்கொல்
வியவாய்காண்வேற்கண்ணாயிவ்விரண்டுமாங்கே
நயவாதுநிற்குநிலை. * ௭ *

வலவைகளல்லாதார்காலாறுசென்று
கலவைகளுண்டுகழிப்பர்வலவைகள்
காலாறுஞ்செல்லார்கருணையாற்றுய்ப்பவே
மேலாறுபாயவிருந்து. * ௮ *

பொன்னிறச்செந்நெற்பொதியொடுபீள்வாட
மின்னொளிர்வானங்கடலுள்ளுங்கான்றுகுக்கும்
வெண்மையுடையார்விழுச்செல்வமெய்தியக்கால்
வண்மையுமன்னதகைத்து. * ௯ *

ஓதியுமோதாருணர்விலாரோதாது
மோதியனையாருணர்வுடையார்தூய்தாக
நல்கூர்ந்துஞ்செல்வரிரவாதார்செல்வரு
நல்கூர்ந்தாரீயாரெனின். * ௰ *    அ௲ உ௱௭௰

—o—

நட்டார்க்குநள்ளாதவர்க்குமுளவரையா
லட்டதுபாத்துண்டலட்டுண்டலட்ட
தடைத்திருந்துண்டொழுகுமாவதின்மாக்கட்
கடைக்குமாமாண்டைக்கதவு. * க *

எத்துணையானுமியைந்தவளவினாற்
சிற்றறஞ்செய்தார்தலைப்படுவர்மற்றைப்
பெருஞ்செல்வமெய்தியக்காற்பின்னறிதுமென்பா
ரழிந்தார்பழிகடலத்துள். * உ *

துய்த்துக்கழிப்பான்றுறவோர்க்கொன்றீகலான்
வைத்துக்கழியுமடவோனைவைத்த
பொருளுமவனைநகுமேயுலகத்
தருளுமவனைநகும். * ௩ *

கொடுத்தலுந்துய்த்தலுந்தேற்றாவிடுக்குடை
யுள்ளத்தான்பெற்றபெருஞ்செல்வமில்லத்
துருவுடைக்கந்நியைப்போலப்பருவத்தா
லேதிலான்றுய்க்கப்படும். * ௪ *

எறிநீர்ப்பெருங்கடலெய்தியிருந்து
மறுநீர்ச்சிறுகிணற்றூறல்பார்த்துண்பர்
மறுமையறியாதாராக்கத்திற்சான்றோர்
கழிநல்குரவேதலை. * ௫ *

எனைத்தெனைத்தென்றிருக்குமேழைப்பொருளை
யெனைத்தெனைத்தென்றிருப்பன்யானுந்தனைதாயிற்
றானுமதனைவழங்கான்பயன்றுவ்வான்
யானுமதனையது. * ௬ *

வழங்காதசெல்வரினல்கூர்ந்தாருய்ந்தா
ரிழந்தாரெனப்படுதலுய்ந்தாருழந்ததனைக்
காப்புய்ந்தார்கல்லுதலுமுய்ந்தார்தங்கைநோவ
யாப்புய்ந்தாருய்ந்தபல. * ௭ *

தனதாகத்தான்கொடான்றாயத்தவருந்
தமதாயபோழ்தேகொடாஅர்தனதாக
முன்னேகொடுப்பினவர்கடியார்தான்கடியான்
பின்னையவர்கொடுக்கும்போழ்து. * ௮ *

இரவலர்கன்றாகவீவாராவாக
விரகிற்சுரப்பதாம்வண்மைவிரகின்றி
வல்லவரூன்றவடியாபோல்வாய்வைத்துக்
கொல்லச்சுரப்பதாங்கீழ். * ௯ *

ஈட்டலுந்துன்பமற்றீட்டியவொண்பொருளைக்
காத்தலுமாங்கேகடுந்துன்பங்காத்தல்
குறைபடிற்றுன்பங்கெடிற்றுன்பந்துன்பக்
குறைபதிமற்றைப்பொருள். * ௰ * ஆக ௨௱௮௰



அத்திட்ட கூறையரைச்சுற்றிவாழினும்
பத்தெட்டுடைமைபலருள்ளும்பாடெய்து
மொத்தகுடிப்பிறந்தக்கண்ணுமொன்றில்லாதார்
செத்தபிணத்திற்கடை. * ௧ *

நீரினுநுண்ணிதுநெய்யென்பர்நெய்யினும்
யாருமறிவர்புகைநுட்பந்தேரி
னிரப்பிடும்பையாளன்புகுமேபுகையும்
புகற்கரியபூழைநுழைந்து. * ௨ *

கல்லோங்குயர்வரைமேற்காந்தண்மலராக்காற்
செல்லாவாஞ்செம்பொறிவண்டினங்கொல்லைக்
கலாஅற்கிளிகடியுங்கானகநாட
விலாஅஅர்க்கில்லைத்தமர். * ௩ *

உண்டாயபோழ்தினுடைந்துழிக்காகம்போற்
றொண்டாயிரவர்தொகுபவேவண்டாய்த்
திரிதருங்காலத்துத்தீதிலிரோவென்பா
ரொருவருமிவ்வுலகத்தில். * ௪ *

பிறந்தகுலமாயும்பேராண்மைமாயுஞ்
சிறந்ததங்கல்வியுமாயுங்கறங்கருவி
கன்மேற்கழூஉங்கணமலைநன்னாட
வின்மைதழுவப்பட்டார்க்கு. * ௫ *

உள்கூர்பசியா லுழைநகைஇச்சென்றார்கட்
குள்ளாரிருந் துமொன்றாற்றாதா னுள்ளா
ரிருந் துயிர்கொன்னேகழியாது தான்போய்
விருந்தினனாதலேநன் று. * ௬ *

நீர்மையேயன்றிநிரம்பவெழுந்ததங்
கூர்மையுமெல்லாமொருங்கிழப்பர்கூர்மையின்
முல்லையலைக்குமெயிற்றாய்நிரப்பென்னு
மல்லலடையப்பட்டார். * ௭ *

இட்டாற்றுப்பட்டொன்றிரந்தவர்க்காற்றாது
முட்டாற்றுப்பட்டுமுயன்றுள்ளேர்வாழ்தலி
னெட்டாற்றுச்சென்றுநிரைமனையிற்கைந்நீட்டுங்
கெட்டாற்றுவாழ்க்கையேநன்று. * ௮ *

கடகஞ்செறிந்ததங்கைகளால்வாங்கி
யடகுபறித்துக்கொண்டட்டுக்குடைகலனா
வுப்பிலிவெந்தைதின்றுள்ளற்றுவாழ்பவே
துப்புரவுசென்றுலந்தக்கால். * ௯ *

ஆர்த்தபொறியவணிகிளர்வண்டினம்
பூத்தொழிகொம்பின்மேற்செல்லாவாநீர்த்தருவி
தாழாவுயர்சிறப்பிற்றண்குன்றநன்னாட
வாழாதார்க்கில்லைத்தமர். * ௰ * அ௲ உள்கய.



திருமதுகையாகத்திறனிலார்செய்யும்
பெருமிதங்கண்டக்கடைத்துமெரிமண்டிக்
கானந்தலைப்பட்டதீப்போற்கனலுமே
மாநமுடையார்மநம். * க *

என்பாயுகினுமியல்பிலார்பின்சென்று
தம்பாடுரைப்பரோதம்முடையார்தம்பா
லுரையாமைமுன்னுணருமொண்மையுடையார்க்
குரையாரோதாமுற்றநோய். * உ *

யாமாயினெம்மில்லங்காட்டுதுந்தாமாயிற்
காணவேகற்பழியுமென்பார்போனாணிப்
புறங்கடைவைத்தீவர்சோறுமதனான்
மறந்திடுகசெல்வர்தொடர்பு. * ௩ *

இம்மையுநன்றாமியனெறியுங்கைவிடா
தும்மையுநல்லபயத்தலாற்செம்மையி
னானங்கமழுங்கதுப்பினாய்நன்றேகாண்
மாநமுடையார்மதிப்பு. * ௪ *

பாவமுமேனைப்பழியும்படவருவ
சாயினுஞ்சான்றவர்செய்கலார்சாத
லொருநாளொருபொழுதைத்துன்பமவைபோ
லருநவையாற்றுதலின்று. * ரு *

மல்லன்மாஞாலத்துவாழ்பவருளெல்லாஞ்
செல்வரெனினுங்கொடாதவர்நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக்கண்ணும்பெருமுத்தரையரே
செல்வரைச்சென்றிரவாதார். * ௬ *

கடையெலாங்காய்பசியஞ்சுமற்றேனை
யிடையெலாமின்னாமையஞ்சும்புடைபரந்த
விற்புருவவேனெடுங்கண்ணாய்தலையெல்லாஞ்
சொற்பழியஞ்சிவிடும். * ௭ *

நல்லர்பெரிதளியர்நல்கூர்ந்தாரென்றெள்ளிச்
செல்வர்சிறுநோக்குநோக்குங்காற்கொல்ல
னுலையூதுந்தீயேபோலுள்கனலுங்கொல்லோ
தலையாயசான்றோர்மனம். * ௮ *

நச்சியார்க்கீயாமைநாணன்றுநாணாளு
மச்சத்தானாணுதனாணன்றுமெச்சத்தின்
மெல்லியராகித்தம்மேலாயார்செய்தது
சொல்லாதிருப்பதுநாண். * ௯ *

கடமாதொலைச்சியகானுறைவேங்கை
யிடம்வீழ்ந்ததுண்ணாதிறக்குமிடமுடைய
வானகங்கையுறினும்வேண்டார்விழுமியோர்
மானமழுங்கவரின். * ௰ *

அட ஙா.

நம்மாலேயாவரிந்நல்கூர்ந்தாரென்றுந்
தம்மாலாமாக்கமிலவென்றுதம்மை
மருண்டமனத்தார்பின்செல்பவோதாமுந்
தெருண்டவறிவினவர். * ௧ *

இழித்தக்கசெய்தொருவனாரவுணலிற்
பழித்தக்கசெய்யான்பசித்தறவன்றே
விழித்திமைக்குமாத்திரையன்றோவொருவ
னழித்துப்பிறக்கும்பிறப்பு. * ௨ *

இல்லாமைகந்தாவிரவுதுணிந்தொருவர்
செல்லாருமல்லர்சிறுநெறிபுல்லா
வகம்புகுமினுண்ணுமினென்பவர்மாட்டல்லான்
முகம்புகுதலாற்றுமோமேல். * ௩ *

திருத்தன்னைநீப்பினுந்தெய்வஞ்செறினு
முருத்தமனத்தோடுயர்வுள்ளினல்லா
லருத்தஞ்செறிக்குமறிவிலார்பின்சென்
றெருத்திறைஞ்சிநில்லாதாமேல். * ௪ *

கரவாததிண்ணன்பிற்கண்ணன்னார்கண்ணு
மிரவாதுவாழ்வதாம்வாழ்க்கையிரவினை
யுள்ளுங்காலுள்ளமுருகுமாலென்கொலோ
கொள்ளுங்காற்கொள்வார்குறிப்பு. * ௫ *

இன்னாவியைகவினியவொழிகென்று
தன்னையேதானிரப்பத்தீர்வதற்கென்னைகொல்
காதல்கவற்றுமனத்தினைக்கண்பாழ்பட்
டேதிலவரையிரவு. * ௬ *

என்றும்புதியார்பிறப்பினுமிவ்வுலகத்
தென்றுமவனேபிறக்கலான்குன்றின்
பரப்பெலாம்பொன்னொழுகும்பாயருவிநாட
விரப்பாரையெள்ளாமகன். * ௭ *

புறத்துத்தன்னின்மைநலியவகத்துத்தன்
னன்ஞானநீக்கிநிறீஇயொருவனை
யீயாயெனக்கென்றிரப்பானேலந்நிலையே
மாயானோமாற்றிவிடின். * ௮ *

ஒருவரொருவரைச்சார்ந்தொழுகலாற்றி
வழிபடுதல்வல்லுதலல்லாற்பரிசழிந்து
செய்யீரோவென்னானுமென்னுஞ்சொலின்னாதே
பையத்தான்செல்லுநெறி. * ௯ *

பழமைகந்தாகப்பசைந்தவழியே
கிழமைதான்யாதானுஞ்செய்க கிழமை
பொறாஅதவரென்னிற்பொத்தித்தநெஞ்சத்
தறாஅச்சுடுவதோர்தீ. * ௰ * அதிகாரம்.

மெய்ஞ்ஞானக்கோட்டியுறழ்வழிவிட்டாங்கோ
ரஞ்ஞானந்தந்திட்டதுவாங்கறத்துழாய்க்
கைஞ்ஞானங்கொண்டொழுகுங்காரறிவாளர்முன்
சொன்ஞானஞ்சோரவிடல். * ௧ *

தாப்பாடஞ்சொல்லிநயமுணர்வார்போற்செறிக்குந்
தீப்புலவற்சேரார்செறிவுடையார்தீப்புலவன்
கோட்டியுட்குன்றக்குடிப்பழிக்குமல்லாற்
றேட்புடைக்கொள்ளாவெழும். * ௨ *

சொற்றாற்றுக்கொண்டுசுனைத்தெழுதல்காமுறுவர்
கற்றாற்றல்வன்மையுந்தாந்தேற்றார்கற்ற
செலவுரைக்குமாறறியார்தோற்பதறியார்
பலவுரைக்குமாந்தர்பலர். * ௩ *

கற்றதூஉமின்றிக்கணக்காயர்பாடத்தாற்
பெற்றதாம்பேதையோர்சூத்திரமற்றதனை
நல்லாரிடைப்புக்குநாணாதுசொல்லித்தன்
புல்லறிவுகாட்டிவிடும். * ௪ *

வென்றிப்பொருட்டால்விலங்கொத்துமெய்கொள்ளார்
கன்றிக்கறுத்தெழுந்துகாய்வாரோடொன்றி
யுரைவித்தகமெழுமார்காண்பவேகையுட்
சுரைவித்துப்போலுந்தம்பல். * ௫ *

பாடமேயோதிப்பயன்றெரிதறேற்றாத
மூடர்முனிதக்கசொல்லுங்காற்கேடருஞ்சீர்ச்
சான்றோர்சமழ்த்தனர்நிற்பவேமற்றவரை
யீன்றாட்கிறப்பப்பரிந்து. * ௬ *

பெறுவ தொள்பவர்தோள்போனெறிபட்டுக்
கற்[illegible]செல்லாவெளியநூன்மற்றம்
முறிபுரைமேனியருள்ளம்போன்றியார்க்கு
மறிதற்கரியபொருள். * ௭ *

புத்தகமேசாலத்தொகுத்தும்பொருடெரியா
ருய்த்தகமெல்லாநிறைப்பினுமற்றவற்றைப்
போற்றும்புலவரும்வேறேபொருடெரிந்து
தேற்றும்புலவரும்வேறு. * ௮ *

பொழிப்பகலநுட்பநூலெச்சமிந்நான்கிற்
கொழித்தகலங்காட்டாதார்சொற்கள்பழிப்பி
னிரையாமாசேர்க்குநெடுங்குன்றநாட
வுரையாமோநூலிற்குநன்கு. * ௯ *

இற்பிறப்பில்லாரெனைத்துநூல்கற்பினுஞ்
சொற்பிறரைக்காக்குங்கருவியோவிற்பிறந்த
நல்லறிவாளர்நவின்றநூறேற்றாதார்
புல்லறிவுதாமறிவதில். * ௰ * அதி- ௩௨ ௰.

---

அருளினறமுரைக்குமன்புடையார்வாய்ச்சொற்
பொருளாகக்கொள்வர்புலவர்பொருளல்லா
வேழையதனையிகழ்ந்துரைக்கும்பாற்கூழை
மூழைசுவையுணராதாங்கு. * ௧ *

அவ்வியமில்லாரறத்தாறுரைக்குங்காற்
செவ்வியரல்லார்செவிகொடுத்துங்கேட்கலார்
கவ்வித்தோறின்னுங்குணங்கர்நாய்பாற்சோற்றின்
செவ்விகொளறேற்றாதாங்கு. * ௨ *

இமைக்குமளவிற்றமின்னுயிர்போமார்க்க
மெனைத்தானுந்தாங்கண்டிருந்துந்தினைத்துணையு
நன்றிபுரிகல்லாநாணின்மடமாக்கள்
பொன்றிலென்பொன்றாக்காலென். * ௩ *

உளநாள்சிலவாலுயிர்க்கேமமின்றாற்
பலர்மன்னுந்தூற்றும்பழியாற்பலருள்ளுங்
கண்டாரோடெல்லாநகாஅதெவனொருவன்
றண்டித்தனிப்பகைகோள். * ௪ *

எய்தியிருந்தவவைமுன்னர்ச்சென்றெள்ளி
வைதானொருவனொருவனைவைய
வயப்பட்டான்வாளாவிருப்பானேல்வைதான்
வியத்தக்கான்வாழுமெனின். * ௫ *

மூப்புமேல்வாராமைமுன்னேயறவினையை
யூக்கியதன்கண்முயலாதானூக்கிப்
புறத்திருபோகென்னுமின்னாச்சொலினுட்
டொழூத்தையாற்கூறப்படும். *

தாமேயுமின்புறார்தக்கார்க்குநன்றாற்றா
ரேமஞ்சார்நன்னெறியுஞ்சேர்கலார்தாமயங்கி
யாக்கத்துட்டூங்கியவத்தமேவாழ்நாளைப்
போக்குவார்புல்லறிவினார். * ௭ *

சிறுகாலையேதமக்குச்செல்வுழிவல்சி
யிறுகிறுகத்தோட்கோப்புக்கொள்ளாரிறுகிறுகிப்
பின்னறிவாமென்றிருக்கும்பேதையார்கைகாட்டும்
பொன்னும்புளிவிளங்காயாம். * ௮ *

வெறுமையிடத்தும்விழுப்பிணிப்போழ்து
மறுமைமனத்தாரேயாகிமறுமையை
யைந்தையனைத்தானுமாற்றியகாலத்துச்
சிந்தியார்சிற்றறிவினார். * ௯ *

என்னேமற்றிவ்வுடம்புபெற்றுமறநினையார்
கொன்னேகழிப்பர்தம்வாழ்நாளையன்னோ
வளவிறந்தகாதற்றமாருயிரன்னார்க்
கொளவிழைக்குங்கூற்றமுங்கண்டு. * ௰ * ஆ௳ ௯௱௯௰.

---

கொலைஞருலையேற்றித்தீமடுப்பவாமை
நிலையறியாதந்நீர்படிந்தாடியற்றே
கொலைவல்பெருங்கூற்றங்கோட்பார்ப்பவீண்டை
வலையகத்துச்செம்மாப்பார்மாண்பு. * ௧ *

பெருங்கடலாடியசென்றாரொருங்குட
னோசையவிந்தபின்னாடுதுமென்றற்றா
லிற்செய்குறைவினைநீக்கியறவினை
மற்றறிவாமென்றிருப்பார்மாண்பு. * ௨ *

குலந்தவங்கல்விகுடிமைமூப்பைந்தும்
விலங்காமலெய்தியக்கண்ணுநலஞ்சான்ற
மையறுதொல்சீருலகமறியாமை
நெய்யிலாப்பாற்சோற்றினேர். * ௩ *

கன்னனிநல்லகடையாயமாக்களிற்
சொன்னனிதாமுணராவாயினுமின்னினியே
நிற்றலிருத்தல்கிடத்தலியங்குதலென்
றற்றவர்க்குத்தாமுதவலான். * ௪ *

பெறுவதொன்றின்றியும்பெற்றானேபோலக்
கறுவுகொண்டேலாதார்மாட்டுங்கறுவினாற்
கோத்தின்னாகூறியுரையாக்காற்பேதைக்கு
நாத்தின்னுநல்லசுணைத்து. * ௫ *

நங்கண்மரபில்லார்பின்சென்றுதாமவரை
யெங்கண்வணக்குதுமென்பவர்புன்கேண்மை
நற்றளிர்ப்புன்னைமலருங்கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக்கையிழந்தற்று. * ௬ *

ஆகாதெனினுமகத்துநெய்யுண்டாகிற்
போகாதெறும்புபுறஞ்சுற்றும்யாதுங்
கொடாஅரெனினுமுடையாரைப்பற்றி
விடாஅருலகத்தவர். * எ *

நல்லவைநாடொறுமெய்தாரறஞ்செய்யா
ரில்லாதார்க்கியாதொன்றுமீகலாரொல்லா
ரினியார்தோள்சேராரிசைபடவாழார்
முனியார்கொறும்வாழுநாள். * அ *

விழைந்தொருவர்தம்மைவியப்பவொருவர்
விழைந்திலேமென்றிருக்குங்கேண்மைதழங்குகுரற்
பாய்திரைசூழ்வையம்பயப்பினுமின்னாதே
யாய்நலமில்லாதார்மாட்டு. * ௯ *

கற்றனவுங்கண்ணகன்றசாயலுமிற்பிறப்பும்
பக்கத்தார்பாராட்டப்பாடெய்துந்தானுரைப்பின்
மைத்துனர்பல்கிமருந்திற்றணியாத
பித்தனென்றெள்ளப்படும். * ௰ *　　　ஆகூ. ௬௱௪௰.

கப்பிகடவதாக்காலைத்தன்வாய்ப்பெயினுங்
குப்பைகிளைப்போவாக்கோழிபோன்மிக்க
கநம்பொதிந்தநூல்விரித்துக்காட்டினுங்கீழ்தன்
மநம்புரிந்தவாறேமிகும். * ௧ *

காழாயகொண்டுகசடற்றார்தஞ்சாரற்
றாழாதுபோவாமெனவுரைப்பிற்கீழ்தா
னுறங்குவாமென்றெழுந்துபோமாமஃதன்றி
மறங்குமாமற்றொன்றுரைத்து. * ௨ *

பெருநடைதாம்பெறினும்பெற்றிபிழையா
தொருநடையராகுவர்சான்றோர்பெருநடை
பெற்றக்கடைத்தும்பிறங்கருவிநன்னாட
வற்றாமொருநடைகீழ். * ௩ *

தினையனைத்தேயாயினுஞ்செய்தநன்றுண்டாற்
பனையனைத்தாவுள்ளுவர்சான்றோர்பனையனைத்
தென்றுஞ்செயினுமிலங்கருவிநன்னாட
நன்றிலநன்றறியார்மாட்டு. * ௪ *

பொற்கலத்தூட்டிப்புறந்தரினுநாய்பிற
ரெச்சிற்கிமையாதுபார்த்திருக்குமச்சீர்
பெருமையுடைத்தாக்கொளினுங்கீழ்செய்யுங்
கருமங்கள்வேறுபடும். * ௫ *

சக்கரச்செல்வம்பெறினும்விழுமியோ
ரெக்காலுஞ்சொல்லார்மிகுதிச்சொலெக்காலு
முந்திரிமேற்காணிமிகுவதேற்கீழ்தன்னை
யிந்திரனாவெண்ணிவிடும். *௬*

மைதீர்பசும்பொன்மேன்மாண்டமணியழுத்திச்
செய்ததெனினுஞ்செருப்புத்தன்காற்கேயா
மெய்தியசெல்வத்தாராயினுங்கீழ்களைச்
செய்தொழிலாற்காணப்படும். *௭*

கடுக்கெனச்சொல்வற்றாங்கண்ணோட்டமின்றா
மிடுக்கண்பிறர்மாட்டுவக்குமடுத்தடுத்து
வேகமுடைத்தாம்விறன்மலைநன்னாட
வேகுமாமெள்ளுமாங்கீழ். *௮*

பழையரிவரென்றுபன்னாட்பின்னிற்பி
னுழையினியராகுவர்சான்றோர்விழையாதே
கள்ளுயிர்க்குநெய்தற்கனைகடற்றண்சேர்ப்ப
வெள்ளுவர்கீழாயவர். *௯*

கொய்புற்கொடுத்துக்குறைத்தென்றுந்தீற்றினும்
வையம்பூண்கல்லாசிறுகுண்டையையகே
ளெய்தியசெல்வத்தாராயினுங்கீழ்களைச்
செய்தொழிலாற்காணப்படும். *௰* ஆ௨ ௩௱௫௰.



ஆர்த்தவறிவினாரான்டிளையராயினுங்
காத்தோம்பித்தம்மையடக்குபமூத்தொறூஉந்
தீத்தொழிலேகன்றித்திரிதந்தெருவைபோற்
போத்தறார்புல்லறிவினார். * க *

செழும்பெரும்பொய்கையுள்வாழினுமென்றும்
வழும்பறுக்ககில்லாவாந்தேரைவழும்பில்சீர்
நூல்கற்றக்கண்ணுநுணுக்கமொன்றில்லாதார்
தேர்கிற்கும்பெற்றியரிது. * உ *

கணமலைநன்னாடகண்ணின்றொருவர்
குணனேயுங்கூறற்கரிதாற்குணனழுங்கக்
குற்றமுழைநின்றுகூறுஞ்சிறியவர்கட்
கெற்றாலியன்றதோநா. * ௩ *

கோடேந்தகலல்குற்பெண்டிர்தம்பெண்ணீர்மை
சேடியர்பொலச்செயறேற்றார்கூடிப்
புதுப்பெருக்கம்போலத்தம்பெண்ணீர்மைகாட்டி
மதித்திறப்பர்மற்றையவர். * ௪ *

தளிர்மேலேநிற்பினுந்தட்டாமற்செல்லா
வுளிநீரர்மாதோகயவரளிநீரார்க்
கென்னானுஞ்செய்யாரெனைத்தானுஞ்செய்பவே
வின்னாங்குச்செய்வார்ப்பெறின். * ௫ *

மலைநலமுள்ளுங்குறவன்பயந்த
விளைநிலமுள்ளுமுழவன்சிறந்தொருவர்
செய்தநன்றுள்ளுவர்சான்றோர்கயந்தன்னை
வைததையுள்ளிவிடும். * ௬ *

ஒருநன்றிசெய்தவர்க்கொன்றியெழுந்த
பிழைநூறுஞ்சான்றோர்பொறுப்பர்கயவர்க்
கெழுநூறுநன்றிசெய்தொன்றுதீதாயி
னெழுநூறுந்தீதாய்விடும். * ௭ *

எட்டைப்பருவத்துமிற்பிறந்தார்செய்வன
மோட்டிடத்துஞ்செய்யார்முழுமக்கள்கோட்டை
வயிரஞ்செறிப்பினும்வாட்கண்ணாய்பன்றி
செயிர்வேழமாகுதலின்று. * ௮ *

இன்றாதுமிந்நிலையேயாதுமினிச்சிறிது
நின்றாதுமென்றுநினைத்திருந்தொன்றி
யுரையின்மகிழ்ந்துதம்முள்ளம்வேறாகி
மரையிலையின்மாய்ந்தார்பலர். * ௯ *

நீருட்பிறந்துநிறம்பசியதாயினு
மீரங்கிடையகத்தில்லாகுமோரு
நிறைப்பெருஞ்செல்வத்துநின்றக்கடைத்து
மறைப்பெருங்கல்லன்னாருடைத்து. * ௰ * அ௨ ௩௱௫௰.

---

மழைதிளைக்குமாடமாய்மாண்பமைந்தகாப்பா
யிழைவிளக்குநின்றிமைப்பினென்னாம்விழைதக்க
மாண்டமனையாளையில்லாதானில்லகங்
காண்டற்கரியதோர்காடு. * ௧ *

வழுக்கெனைத்துமில்லாதவாள்வாய்க்கிடந்து
மிழுக்கினைத்தாம்பெறாராயினிழுக்கெனைத்துஞ்
செய்குறாப்பாணிசிறிதேயச்சின்மொழியார்
கையுறாப்பாணிபெரிது. * ௨ *

எறியென்றெதிர்நிற்பாள்கூற்றஞ்சிறுகாலை
யட்டில்புகாதாளரும்பிணியட்டதனை
யுண்டியுதவாதாளில்வாழ்பேயிம்மூவர்
கொண்டானைக்கொல்லும்படை. * ௩ *

கடியெனக்கேட்டுங்கடியான்வெடிபட
வார்ப்பதுகேட்டுமதுதெளியான்பேர்த்துமோ
ரிற்கொண்டினிதிரூஉமேமுறுதலென்பவே
கற்கொண்டெறியுந்தவறு. * ௪ *

தலையேதவமுயன்றுவாழ்தலொருவர்க்
கிடையேயினியார்கட்டங்கல்கடையே
புணராதென்றெண்ணிப்பொருணசையாற்றம்மை
யுணரார்பின்சென்றுநிலை. * ௫ *

கல்லாக்கழிப்பர்தலையாயார்நல்லவை
துவ்வாக்கழிப்பரிடைகள்கடைக
ளினிதுண்ணேமாரப்பெறேமியாமென்னு
முனிவினாற்கண்பாடிலர். * ௬

செந்நெல்லாலாயசெழுமுளைமற்றுமச்
செந்நெல்லேயாகிவிளைதலானெல்
வயனிறையக்காய்க்கும்வளவயலூர
மகனறிவுதந்தையறிவு. * ௭

உடைப்பெருஞ்செல்வருஞ்சான்றோருங்கெட்டுப்
புடைப்பெண்டிர்மக்களுங்கீழும்பெருகிக்
கடைக்காறலைக்கண்ணதாகிக்குடைக்கால்போற்
கீழ்மேலாய்நிற்குமுலகு. * ௮

இனியார்தந்நெஞ்சத்துநோயுரைப்பவந்நோய்
தணியாதவுள்ளமுடையார்மணிவரன்றி
வீழுமருவிவிறன்மலைநன்னாட
வாழ்வின்வரைபாய்தனன்று. * ௯

புறப்புனலும்பூங்குழையார்நட்புமிரண்டும்
விறப்புறநாடின்வேறல்லப்புறப்புனலு
மாரியறவேயறுமேயவரன்பும்
வாரியறவேயறும். * ௰ *　　　ஆக ௧௱௭௰

---

விளக்கொளியும்வேசையர்நட்புமிரண்டுந்
துளக்கறநாடின்வேறல்லவிளக்கொளியு
நெய்யற்றகண்ணேயறுமேயவர்நட்புங்
கையற்றகண்ணேயறும். * க *

அங்கோட்டகலல்குலாயிழையாணம்மொடு
செங்கோடுபாய்துமேயென்றுண்மைச்செங்கோட்டின்
மேற்காணமின்மையான்மேவாதொழிந்தாளே
காற்கானோய்காட்டிக்கலுழ்ந்து. * உ *

அங்கண்விசும்பினமரர்தொழப்படுஞ்
செங்கண்மாலாயினுமாகமற்றங்கைக்
கொடுப்பதொன்றில்லாரைக்கொய்தளிரன்னார்
விடுப்பர்தங்கையாற்றொழுது. * ௩ *

ஆணமிலநெஞ்சத்தணிநீலக்கண்ணார்க்குக்
காணமில்லாதார்கடுவனையர்காணவே
செக்கூர்ந்துகொண்டாலுஞ்செய்தபொருளுடையா
ரக்காரமன்னாவர்க்கு. * ௪ *

பாம்பிற்கொருதலைகாட்டியொருதலை
தேம்படுதெண்கயத்துமீன்காட்டுமாங்கு
மலங்கன்னசெய்கைமகளிர்தோள்சேர்வார்
விலங்கன்னவெள்ளறிவினார். * ரு *

பொத்தநூற்கல்லும்புணர்பிரியாவன்றிலும்போ
னித்தலுநம்மைப்பிரியலமென்றுரைத்த
பொற்றொடியும்போர்த்தகர்க்கோடாயினாணன்னெஞ்சே
நிற்றியோபோதியோநீ. * ௬ *

ஆமாபோனக்கியவர்கைப்பொருள்கொண்டு
சேமாபோற்குப்புறூஉஞ்சில்லைக்கணன்பினை
யேமாந்தெமதென்றிருந்தார்பெறுபவே
தாமாம்பலராணகை. * எ *

ஏமாந்தபோழ்தினியார்போன்றின்னாராய்த்
தாமார்ந்தபோதேதகர்க்கோடாமானோக்கிற்
றந்நெறிப்பெண்டிர்தடமுலைசேராரே
செந்நெறிச்சேர்துமென்பார். * அ *

ஊறுசெய்நெஞ்சந்தம்முள்ளடக்கியொண்ணுதலார்
தேறமொழிந்தமொழிகேட்டுத்தேறி
யெமரென்றுகொள்வாருங்கொள்பவேயார்க்குந்
தமரல்லர்தம்முடம்பினார். * ௯ *

உள்ளமொருவனுழையதாவொண்ணுதலார்
கள்ளத்தாற்செய்யுங்கருத்தெல்லாந்தெள்ளி
யறிந்தவிடத்துமறியாராம்பாவஞ்
செறிந்தவுடம்பினவர். * ௰ * ஆக ௩௱அ௰.



அரும்பெற்றகற்பினயிராணியன்ன
பெரும்பெயர்ப்பெண்டிரெனினும்விரும்பிப
பெறுநசையாற்பின்னிற்பாரின்மையேபேணு
நறுநுதலாணன்மைத்துணை. * ௧ *

குடநீராட்டுண்ணுமிடுக்கட்பொழுதுங்
கடனீறவுண்ணுங்கேளிர்வரினுங்
கடனீர்மைகையாறுக்கொள்ளுமடமொழி
மாதர்மனைமாட்சியாள். * ௨ *

நாலாறுமாறாய்நனிசிறிதாயெப்புறனு
மேலாறுமேலுறைசோரினுமேலாய
வல்லாளாய்வாழுமூர்தற்புகழுமாண்கற்பி
னில்லாளமர்ந்ததேயில். * ௩ *

கட்கினியாள்காதலன்காதல்வகைபுனைவா
ளுட்குடையாளூர்நாணியல்பினாளுட்கி
யிடனறிந்தூடியினிதினுணரு
மடமொழிமாதராள்பெண். * ௪ *

எஞ்ஞான்றுமெங்கணவரெந்தோண்மேற்சேர்ந்தெழினு
மஞ்ஞான்றுகண்டேம்போனாணுதுமாலெஞ்ஞான்று
மென்னைகெழீஇயினர்கொல்லோபொருணசையாற்
பன்மார்புசேர்ந்தொழுகுவார். * ௫ *

உள்ளந் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்கண் ணொண்பொருடெள்ளிய
வாண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம். * ௬ *

கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்
றொருங்கொப்பக் கொண்டானோ டொருங்கொவ்வா
நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்ப னேடா
தென்னையுந் தோய வரும். * ௭ *

கொடியவை கூறாதி பாண நீ கூறி
னடிபைய விட்டொதுங்கிச் சென்று துடியி
னிடக்கண் ணனையம்யா மூரற் கதனால்
வலக்கண் ணனையார்க் குரை. * ௮ *

சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
தீப்பறக்க நொந்தேனும் யானேமற் றீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகல
நோக்கி யிருந்தேனும் யான். * ௯ *

அரும்பவிழ் தாரினா னெம்மரு ளுமென்று
பெரும்பொய் யுரையாதி பாண கரும்பின்
கடைக்கண் ணனைய நாமூரற் கதனா
லிடைக்கண் ணனையார்க் குரை. * ௰ * அதி ௩௯.

———

பொருட்பான் முற்றிற்று.

---

றடங்காக்காற்பாயும்பசலைமற்றாடி
யுடங்காக்காலும்பின்றுங்காமம்வயங்கோத
நில்லாத்திரையலைக்குநீள்கழித்தண்சேர்ப்ப
புல்லாப்புலப்பதோராறு. * க *

தம்மமர்காதலர்தார்சூழணியகலம்
விம்மமுயங்குந்துணையில்லார்க்கிளமெனப்
பெய்யவெழிலிமுழங்குந்திசையெல்லா
நெய்தலறைந்தன்னநீர்த்து. * உ *

கம்மஞ்செய்மாக்கள்கருவியொடுக்கிய
மம்மர்கொண்மாலைமலராய்ந்துபூத்தொடுப்பாள்
கைம்மாலையிட்டுக்கலுழ்ந்தாடுணையில்லார்க்
கிம்மாலையென்செய்வதென்று. * ௩ *

செல்சுடர்நோக்கிச்சிதரரிக்கண்கொண்டநீர்
மெல்விரலூழ்தெறியாவிம்மித்தன்மெல்விரலி
ணுள்வைத்துநங்குற்றமெண்ணுங்கொலந்தோதன்
னேருள்ளைத்துணமேற்கிடந்து. * ௪ *

கண்டயவென்றுங்கருத்தின்றிக்காதலி
பின்சென்றதம்மசிறுசிரல்பின்சென்று
மூக்கிழிடமூழ்ந்தமெறிகல்லாவென்புருவங்
கோட்டியவில்வாக்கறிந்து. * ௫ *

அரக்காம்பனாறும்வாயம்மருங்கிற்கன்னோ,
பரற்கானமாற்றினகொல்லோவரக்கார்ந்த
பஞ்சிகொண்டூட்டினும்பையெனப்பையெனவென்
றஞ்சிப்பின்வாங்குமடி. * ௬ *

ஓலைக்கணக்கரொலியடங்குபுன்செக்கர்
மாலைப்பொழுதின்மணந்தார்பிரிவுள்ளி
மாலைபரிந்திட்டழுதாள்வனமுலைமேற்
கோலஞ்செய்சாந்தந்திமிர்ந்து. * ௭ *

கடக்கருங்கானத்துக்காளைபின்னாளை
நடக்கவும்வல்லையோவென்றிசுடர்த்தொடீஇ
பெற்றொருவன்பெருங்குடிநாயத்திலையே
கற்றுணைநூறுமாறு. * ௮ *

முலைக்கண்ணுமுத்துமுழுமெய்யும்புல்லு
மிலைக்கலம்பாருமதியேன்கலைக்கணம்
வேங்கைவெரூஉநெறிசெலியபோலுமென்
பூம்பாவைசெய்தகுறி. * ௯ *

கல்லோன்றடையபாலுங்காக்கையும்பையரவு
மெல்லீன்றயாயும்பிழைத்ததென்பொன்னீன்ற
கோங்கரும்பன்னமுலையாய்பொருள்வயிற்
பாங்கனார்சென்றநெறி. * ௰ * அதி. ௪௰.

காமத்துப்பான்முற்றிற்று.

---

நாலடிநானூறுமுற்றிற்றுமுற்றும்.